

வாழ்க வாழ்க
செங்குந்தர்!

வெல்க வெல்க
செங்குந்தம்!!

நாகை அருள்மிகு மெய்கண்ட மூர்த்தி சுவாமி (குமரன் கோவில்)

# செங்குந்தர் உறுதிமொழி

நாம் செங்குந்த குலக்கடவுள் அருள்மிகு முருகப்பெருமான் ஆணையாக, மனசாட்சியுடன் கீழ்க்கண்டவாறு உறுதி பூணுகிறோம்.

1. நாம் இந்தியக் குடிமக்களாய் இருப்பதை, பெருமையாகக் கருதுகிறோம். நமது நாட்டின் அரசியல் அமைப்புச் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு, நாட்டின் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபடுவோம்.
2. நாம், செங்குந்தர் என்ற உணர்வுடன் ஒன்றுபட்டு, நமது சங்கத்தின் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு சமூக, பொருளாதார, கல்வி, தொழில், கலாச்சார முன்னேற்றத்திற்குப் பாடுபடுவோம். சமூக நலம் காப்போம்.
3. நாம் மற்ற இனத்தவரிடம், மனித நேயம் கொண்டு, நட்புடனும், அன்புடனும் பழகுவோம்.
4. நாம், நமது உரிமைகளைப் பாதுகாக்க எப்பொழுதும் விழிப்புடன் செயல்படுவோம்.
5. நாம் நமது சங்கம் நிறுவிய சான்றோர்களை நினைவில் கொண்டு, சங்கத்தை நாளும் வளர்த்திடுவோம்.

# தலைவர் மடல்

பொறாமை, கோபம், பேராசை இல்லாத வாழ்க்கைப் பாதையைத் தேர்ந்தெடுத்து வாழ்க்கைக்கு ஓர் அழகான எடுத்துக்காட்டாய் வாழ்ந்து கொண்டிருக்கும் செங்குந்த சொந்தங்களுக்கு வணக்கம்.

இந்திய தேசத்தின் சுதந்திரப் போராட்ட குழுவால் சுதேசி இயக்கத்தின் தொடக்க நாளாக ஆகஸ்ட் 7, 1905 அன்று அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்பட்டது.

அந்நிய நாட்டுத் தயாரிப்புகளைப் புறக்கணித்து உள்நாட்டுப் பொருட்கள் மற்றும் உற்பத்தி செயல்முறைகளுக்கு முன்னுரிமை அளிக்க சுதேசி இயக்கம் தொடங்கப்பட்டது.

இதை நினைவுபடுத்தும் விதமாக 2015ஆம் ஆண்டு ஆகஸ்ட் 7ஆம் நாளை தேசிய கைத்தறி தினமாக கொண்டாட மத்திய அரசு உத்தரவிட்டது.



அன்று முதல் ஒவ்வொரு ஆண்டும் கைத்தறி நெசவாளர்களின் வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டு ஆகஸ்ட் 7ஆம் நாள் **தேசிய கைத்தறி தினம்** கொண்டாடப்பட்டு வருகிறது.

இது சர்வதேச சந்தையில் உண்மையான, உலகளாவிய தரமான கைத்தறியை ஊக்குவிக்க முயல்கிறது.

தமிழக அரசும் கைத்தறி ஜவுளிகளை அரசு ஊழியர்கள் வாங்குவதற்கு உத்தரவிட்டுள்ளது.

நம் செங்குந்தர்களின் மூலாதாரமான கைத்தறித் தொழில் வளர்ச்சி பெறுவதற்கு பல வழிகளில் பல்வேறு முயற்சிகள் எடுத்து வருகிறோம். விரைவில் அதற்குண்டான நல்ல பலன்கள் தெரியவரும்.

*நல்லதொரு ஆடையெனில் – நெசவு*
*நூலிழைத்த கைத்தறியாடையே!*
*நெசவுத்தொழிலினால் நம் தேசம்*
*நிமிர்கின்ற நாள் வரும்!*

அன்புடன்

KPK செல்வராஜ்

திருநாகப்பட்டினம் அருள்மிகு கருந்தடங்கண்ணி அம்மை எனும்

# அருள்மிகு நீலாயதாட்சியம்மன் உடனுறை அருள்மிகு காயாரோகணசுவாமி திருக்கோயில்



சோழ வளநாட்டின் காவிரி தென்கரைத் தலங்களுள் 82வது தலமாகவும், முசுகுந்த மன்னன் நிறுவிய சப்தவிடங்க தலங்களுள் ஒன்றாகவும், சக்தி பீடம் 64ல் ஒன்றாகவும் நாகை அருள்மிகு நீலாயதாட்சியம்மன் உடனுறை காயாரோகணசுவாமி திருக்கோயில் விளங்குகிறது. இவ்வூர் ஆதிசேஷன் வழிபட்டதால், ‘ஆதி புராணம்’ என்றும், பன்னிரண்டு சிவாலயங்களின் நடுவில் அமைந்துள்ளதால், ‘சிவ ராஜதானி’ என்றும் அழைக்கப்படுகிறது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்று மூவராலும் பாடப்பட்ட தேவாரத் தலமிது.



## பெயர்க் காரணம்

அட்ட நாகங்களில் ஒன்றான ஆதிசேஷன் வணங்கி வாழ்ந்த கடற்கரைப்பட்டினம் இது என்பதால், இத்தலம் நாகப்பட்டினம் என்ற பெயர் பெற்றது. காரோணம் என்பது கோயிலின்

பெயராகும். புண்டரீக முனிவரை உடலோடு (காயம்) தன்னுடன் ஐக்கியமாக்கிக் கொண்டார் பரமேஸ்வரன். இதற்கு "காயாரோஹணம்' என்று பெயர். அதுவே தமிழில் "காரோணம்' என்றானது. தேவாரப்பாடல்கள் அனைத்திலும், 'நாகை காரோணம்' என்றே இத்தலம் குறிப்பிடப்படுகின்றது.

## அதிபத்த நாயனார் கதை

நாகப்பட்டினம் கடற்கரையில் அமைந்துள்ள நுளைப்பாடி என்ற குப்பத்தில் வாழ்ந்த மீனவர் அதிபத்தர் ஆவார். இன்று இப்பகுதி நம்பியான் நகர் என்று வழங்கப்படுகிறது.

இறைவன் மீது பெரும் பக்தி கொண்ட, அதிபத்தர், நாள்தோறும் கடலில் தன் வலை வீச்சில் சிக்கும் முதல் மீனை கடலிலேயே 'சிவார்ப்பணம்' என்று விட்டு விடுவது வழக்கம். இவரின் அன்பைச் சோதிக்க விரும்பிய இறைவன், அவரின் வலையில் அதிக மீன்கள் சிக்காதபடி பார்த்துக் கொண்டார். எப்போதாவது ஒரு முறை ஒரு மீன் கிடைக்கும். ஆனால் அதையும் இறைவனுக்குக் காணிக்கையாகக் கடலில் விட்டுவிடுவார். இதனால் அவர் வறுமையில் வாடினார். இவரை மேலும் சோதிக்க எண்ணிய இறைவன், அதிபத்தர் வீசிய வலையில் பேரொளி வீசும் தங்க மீன் ஒன்றை சிக்கும்படி செய்தார். விலை மதிப்புமிக்க அந்த மீனை, வறுமை பீடித்திருந்த நிலையிலும் தானே வைத்துக்






கொள்ள எண்ணாமல், சஞ்சலம் ஏதுமின்றி, அன்றாடம் செய்வது போலவே அன்றும் இறைவனுக்கே அர்ப்பணித்து கடலில் விட்டுவிட்டார். அதிபத்தரின் பக்தியை மெச்சிய ஆண்டவன், அவருக்குக் காட்சி தந்து, அவரை ஆட்கொண்டார் இந்த வரலாறு நிகழ்ந்த தலமகத் திகழ்வது திருநாகப்பட்டினம் ஆகும்.

## ஆதிசேஷன்

ஆதிசேஷனுக்கு இறைவன் அருளால் ஒரு அழகிய பெண் குழந்தை பிறந்தது. ஆனால் அக்குழந்தை பருவமடைந்த நிலையில், மூன்று தனங்களுடன் வளர்ந்தது. இதைக் கண்டு மனம் வருந்திய ஆதிசேஷன், நாகை இறைவனிடம் வேண்டி நின்றார். இறைவன், "இவளுக்கு உரிய கணவன் வரும்போது தனங்களுள் ஒன்று மறைந்துவிடும்' என்று அருளியது போலவே, சூரிய குல மன்னன் சாலிசுகனைக் கண்டதும், அப்பெண்ணின் குறை நீங்கித் திருமணமும் நடைபெற்றது. அதன்பின் ஆதிசேஷன், இவ்வாலயத்திற்குத் திருப்பணிகள் செய்து நன்றி செலுத்தினார்.

## சவத்திற்கு மரியாதை

பொதுவாக ஆலயத்தைச் சுற்றி இருக்கும் மாட வீதிகளில் எவராவது மரணமடைந்துவிட்டால், அந்த உடலை எடுத்துச் செல்லும்வரை ஆலயக் கதவுகளை மூடியிருப்பது வழக்கம். ஆனால், நாகை காயாரோகணேசுவரர் ஆலயத்தில் ஒரு

ஆச்சரியமான வித்தியாசம்! அதிபத்தர் வாழ்ந்த நம்பியான் நகரில் யார் இயற்கை மரணம் எய்தினாலும், அவரது உடல் ஆலய வாசலுக்குக் கொண்டுவரப்படும். கோயில் கதவுகள் திறந்திருக்கும்.

அங்கே அந்த உடலுக்கு சிவபெருமானின் சார்பாக மாலையும், ஆடையும், தீர்த்தமும் வழங்கப்படும். அதன்பின்னரே அந்த உடல் மயானத்திற்குச் செல்லும். இந்தப் பழக்கம் வேறு எந்த ஆலயத்திலும் இல்லாத ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது.

நம்பியான் நகரைப் போலவே ஆரிய நாட்டுத் தெரு மற்றும் சாமந்தப் பேட்டையில் வாழ்ந்து மரிப்போருக்கும் இந்த மரியாதை உண்டு என்பது கூடுதல் தகவல்.





## கோயில் அமைப்பு

பொதுவாக ஆலயத்தைச் சுற்றிய தெருக்களுக்கு இறைவன் பெயரிலேயே வடக்கு, தெற்கு என மாட வீதிகள் அமைந்திருக்கும். ஆனால் இந்த ஆலயத்தைச் சுற்றி அன்னையின் பெயராலேயே நீலா வடக்கு, நீலா தெற்கு, நீலா கிழக்கு, நீலா மேற்கு என வீதிகள் அமைந்துள்ளது தனிச் சிறப்பாகும்.

இங்கு சுயம்புலிங்கமான மூலவர், "காயாரோகணேசுவரர்' என்ற திருநாமத்துடன், கிழக்கு நோக்கி காட்சி தருகின்றார். அஷ்டதிக்குப் பாலகர்களின் சிலைகள் அமைந்த தலமாகவும் இது விளங்குகின்றது.

## நீலாயதாட்சி

அம்மனின் சந்நிதி, ரதத்தின் அமைப்பில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி, மதுரை மீனாட்சி என்பது போல, 'நாகை நீலாயதாட்சி' புகழ் பெற்றவராக விளங்குகின்றார். இந்த அன்னைக்கு, 'கருந்தடங் கண்ணி' என்ற பெயரும் உண்டு.

அகிலமெல்லாம் காத்து ரட்சிக்கும் அம்பிகையை, இந்த ஊர்க்காரர்கள் மகளாகக் கருதி, "நீலா! நீலா!" எனச் செல்லமாக அழைப்பது மனதை நெகிழ்விக்கின்றது.

அன்னை நீலாயதாட்சியின் பாதுகாவலராக நந்தி தேவர் விளங்குகின்றார். அதனால் தன் தலையை இறைவன் பக்கம் திருப்பி, தனது ஒரு கண்ணை அன்னையின் மீதும், மற்றொரு பார்வையை சிவலிங்கத்தின் மீதும் பதித்திருக்கிறார். இதனால் இவருக்கு "இரட்டைப் பார்வை நந்தி' என்ற பெயரும் உண்டு.

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான அதிபத்தருக்கு தனிச்சந்நிதி அமைந்துள்ளது.

பைரவர் கோலம் பொதுவாக, நாய் வாகனத்தில் காணப்படுவது வழக்கம். ஆனால், புண்டரீக தீர்த்தத்தில் காணப்படும் அஷ்டபுஜ பைரவர், சிம்ம வாகனத்தில்

காட்சி தருகின்றார். இவரை வழிபட்டால் எம பயம் நீங்கி, நீண்ட ஆயுள் பெறலாம். இவரின் உக்ரத்தைத் தணிக்க இவர் எதிரில் இரட்டை விநாயகர் காட்சி தருகின்றனர்.

## தலமரம் – தீர்த்தம்

இத்தலத்தின் தல விருட்சமாக மாமரம் திகழ்கின்றது. இதில் விளையும் காய்கள் இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு என மூன்று சுவைகளையும் கொண்டதாக அமைந்துள்ளது.

ஆலயத்தின் தெற்கே தேவதீர்த்தமும், அதனருகே முக்தி மண்டபமும், மேற்கே முனி தீர்த்தம் எனப்படும் புண்டரீக தீர்த்தமும், பிரம்மன் நீராடிய காகத் தீர்த்தமும், வடக்கே சர்வ தீர்த்தமும், முக்கியமான தீர்த்தங்களாகத் திகழ்கின்றன.



## சித்தர் சமாதி

அன்னையிடம் குழந்தை போல அழுது, முக்தி பெற்ற அழுகுணிச் சித்தரின் ஜீவ சமாதி, அன்னை ஆலயத்தின் பின்புறம் அமைந்துள்ளது.

## தலச்சிறப்புகள்

'புரி' தலத்தையும், காசியையும் போல நாகையில் உள்ள காசி விசுவநாதர் கோயிலிலும் முத்தி மண்டபம் அமைந்துள்ளது.

இங்குள்ள நவக்கிரகங்கள் சப்தவிடங்கத் தலங்களில் காணப்படும் அமைப்பைப் போல, மேற்கு நோக்கி நேர் வரிசையில் அமைந்துள்ளன.

தசரத சக்ரவர்த்தி, தன் நாட்டில் சனி தசையால் பஞ்சம் ஏற்படுவதைத் தவிர்க்க, நாகை சிவபெருமானை வணங்கி அருள்

### கல்வியில் சிறந்த நாகை

பழங்காலத்தில் காஞ்சி, மதுரை, காவிரிப்பூம்பட்டினம் போன்ற நகரங்களுக்கு இணையாக நாகையும் கல்வியில் சிறந்த ஊராகத் திகழ்ந்தது. "கற்றார் பயில் கடல்நாகைக் காரோணம்" என்ற திருஞானசம்பந்தரின் பாடல் இதனை உறுதிப்படுத்துகின்றது.

இதேபோல, காளமேகப் புலவர் இவ்வூருக்கு வந்தபோது, அங்கே விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களிடம், "தம்பி! சோறு எங்கே விக்கும்?" என்று கேட்டாராம். அதற்கு அந்தச் சிறுவர்கள், "தொண்டையில் விக்கும்", என்று பதில் கூறினார்களாம். உடனே கோபம் கொண்ட புலவர், "பாக்கு தரித்து விளையாடும் பாடலுக்கு" என்று சுவரில் எழுதிவிட்டு, சாப்பிடச் சென்றாராம். உண்ட பிறகு பாடலை முடிக்கத் திரும்பி அங்கு வந்துள்ளார். அப்போது அவர் எழுதி வைத்த வரியின் கீழ், "நாக்குத் தமிழுரைக்கும் நன்நாகை" என்று எழுதி முடிக்கப்பட்டிருந்ததைக் கண்டு அதிசயித்தாராம். இதன்மூலம் நாகை கல்வியில் சிறந்த நகராக விளங்கியதை உணரமுடிகிறது.

பெற்றார். இதன் நினைவாக தசரதன் நிறுவிய சனீஸ்வரர் சந்நிதி இங்கே தெற்கு முகமாக அமைந்துள்ளது.

இத்தலத்து விநாயகர் ஆதிசேஷனின் நாகக் குடையுடன் சுந்தர விநாயகராக விளங்குகின்றார்.



## திருவிழாக்கள்

அதிபத்தரின் வரலாற்றைப் போற்றும் வகையில், ஆண்டுதோறும் ஆவணி மாதம் ஆயில்ய நட்சத்திரத்தில், ‘உற்சவ அதிபத்தர்’ படகில் கடலுக்குச் சென்று மீன் பிடிக்கும் சம்பவமும், அங்கே சந்திரசேகரர் ரிஷப வாகனத்தில் காட்சி தரும் தரிசனமும் விழாவாக நடைபெற்று வருகிறது.

அம்மனுக்கு ஆடிப்பூரம் விசேஷமானது. அன்றைய தினத்தில் பீங்கானால் செய்யப்பட்ட பெரிய வாகனத்தில் அம்மன் உலா வருவது குறிப்பிடத்தக்கது.

இவ்வாலயத்தைச் சுற்றிலும் பன்னிரண்டு சிவாலயங்கள் அமைந்துள்ளன. நாகையில் வைகாசி மாதம் நடக்கும் பதினெட்டு நாள் விழாவில் பன்னிரண்டு சிவாலயங்களில் இருந்தும் ரிஷப வாகனங்களின் மீது சிவ மூர்த்தங்கள் ஒன்றுகூடும் திருவிழா, பல காலமாய் நடந்துள்ளது. ஆயினும் ஏனோ இச்சிறப்புமிகு விழா, காலப்போக்கில் நின்றுவிட்டது.

பிரதோஷ காலத்தில், சுவாமி புறப்பாடுக்கு முன்பாக, திருமால் மோகினி உருவில் காட்சி தருவது இந்த ஆலயத்தின் தனிச் சிறப்பாகும். பிரதோஷ கால வரலாற்றை இது நினைவுப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது.

இத்தலத்துத் தியாகராஜரின் பாத தரிசன விழா, வைகாசி விசாகத்திலும், மார்கழி திருவாதிரையிலும் நடைபெறுகிறது. அப்போது தியாகராஜரின் நடனம் வெகு சிறப்பாக இருக்கும். தியாகராஜர் முன்னும் பின்னுமாக நடனமாடுவார். இந்நடனத்திற்கு பாராவதரங்க நடனம் என்று பெயர்.

சப்த விடங்கத் தலங்களுள் ஒன்றான நாகையில் ‘சுந்தர விடங்கர்’ அமைந்துள்ளார்.

சிவபெருமானின் திருமணக் கோலத்தைக் காண வேண்டி, ஏழு ஊர்களில் தவமியற்றிய சாலிசுக மாமன்னனின் தவத்தைக் குறிக்கும் வகையில், சப்த ஸ்தான பல்லக்குத் திருவிழா, இங்கே நடைபெறுகின்றது. அப்போது சப்த ஸ்தான பல்லக்கில் இறைவன் புறப்பட்டு, நாகையைச் சுற்றியுள்ள பொய்கைநல்லூர், பொரவச்சேரி, சிக்கல், பாலூர், வடகுடி, தெத்தி, நாகூர் என ஏழூர்களுக்கு விஜயம் செய்வது கண் கொள்ளாக் காட்சியாகும்.

புண்டரீக முனிவர் இறைவனுடன் ஐக்கியமான விழா, ஆனி மாத ஆயில்ய நட்சத்திரத்தில் சிறப்பாக நடைபெறுகிறது.

நாகை மாவட்டத்தின் தலைநகரான நாகப்பட்டினத்தில் அமைந்துள்ள இக்கோயிலை அடைய எல்லா இடங்களிலிருந்தும் போக்குவரத்து வசதிகள் உள்ளன.

கருத்தோவியம்: **சிவன்மலை பித்தன் நடராசன்**

வாய்மையே வெல்லும்



**இனியவை கூறல்**
(மனத்தை மகிழவைக்கும் இனிய சொற்களைக் கூறுதல்)

**100**



**இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று.**

இனிய சொற்களைக் கூறுவது எளிதாக இருக்கவும், இன்னாத சொற்களை ஒருவன் விரும்பிக் கூறுவது, இனிய கனிகள் இருக்கவும்,அவற்றை உண்ணாமல் எட்டிக்காய் போன்ற தீமைபயக்கும் காய்களை, விரும்பி உண்ணுதல் போன்றதாகும்.

# திருக்குறள் கதை

கதை: பேராசிரியர் **கா.முருகேசன்,** சென்னை

**இந்தத் திருக்குறள் வாழ்க்கையின் மிக முக்கியமான திருக்குறள் அதனால்தான் வள்ளுவர் 100–வதாக வைத்துள்ளார்.**

ஏழைத் தொழிலாளி சீரங்கன் ஒரு பழக்கடைக்குச் சென்றார். அங்கிருக்கும் பழங்களில் எதை வாங்குவது என்று யோசித்தபடி பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது கடைக்காரர் “சீக்கிரம் எடுப்பா, இப்படியே பார்த்துகிட்டு இருந்தா நான் அடுத்த வாடிக்கையாளரைப் பார்க்க வேண்டாமா” என்று கடுமையாப் பேசினார்.

உடனே சீரங்கன் “இந்த மாம்பழத்திலும், அந்த ஆப்பிளிலும் அரைக்கிலோ வேண்டும்” என்றார். அதற்கு கடைக்காரர் “அரைக் கிலோ எல்லாம் கிடையாது. வேண்டுமென்றால் ஒரு கிலோ வாங்கு, இல்லையென்றால் இடத்தைக் காலி செய்” என்று கோபமாகப் பேசினார்.

சீரங்கன் அதிர்ச்சியும் வருத்தமும் அடைந்து, இந்தக் கடைக்காரருக்கு புத்தி புகட்டவேண்டும் என்று எண்ணியபடி, “இங்குள்ள இனிப்பான மாம்பழங்களை எல்லாம் தனியாக எடுத்து வைத்துவிட்டு அதிக புளிப்புள்ள மாம்பழங்களை மட்டும் 1 கிலோ கொடுங்கள்” என்று கேட்டார். அதற்கு கடைக்காரர் “இவ்வளவு இனிப்பான பழங்கள் இருக்கும்போது, புளிப்பான பழங்களை ஏம்பா கேட்கிறாய்” என்றார்.

அதற்கு “எல்லாம் உன்னிடமிருந்து கற்ற பாடம்தான். பேசுவதற்கு எவ்வளவோ இனிமையான சொற்கள் இருக்கும்போது எவ்வளவு கடுமையான சொற்களை நீங்கள் பேசுகின்றீகள். உங்கள் கடைக்கு வருபவர்களிடம் இனிமையாகப் பேசினால் இன்னும் கொஞ்சம் வியாபாரம் ஆகும். அவர்கள் நண்பர்களிடமும் சொல்வார்கள். உங்கள் தொழிலும் பெருகும். யோசித்துப்பாருங்கள்” என்றார்.

இதனைக் கேட்டதும் கடைக்காரர் என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் என்று திருந்தி இனிமையாக பேசத் தொடங்கினார். அதனால் எவருடன் பேசும்போது மிகவும் கவனமாகப் பேசுவோம் இனிமையாகப் பேசுவோம்.

உ

சிவமயம்



# அருள்மிகு ஸ்ரீ பத்ர காளியம்மன் உடனுறை அருள்மிகு ஸ்ரீ வீரபத்ரசுவாமி திருக்கோயில்



பஞ்சகுரோஷத்தலம் (வீரசைவபெரியமடத்திற்குப்பட்டது) பரிகாரஸ்தலம் பித்ருதோஷம்

ஸ்ரீஓட்டக்கூத்தர் ஜீவசமாதி, ஸ்ரீ ரெவணசித்தர் ஜீவசமாதி தாராசுரம், கும்பகோணம் வட்டம்.

**வீரசிங்காதனபீடம்**

**ஸ்ரீலஸ்ரீ ஜெகத்குரு நீலகண்ட சாரங்க தேசிகேந்திர மஹா சுவாமிகள்** அருளாசியுடன்

## ஸ்ரீ கவிச்சக்ரவர்த்தி ஒட்டக்கூத்தர் (ஜீவசமாதி) 831-வது குரு பூஜை விழா அழைப்பிதழ்

**அன்புடையீர்,**

நிகழும் மங்களகரமான பிலவ வருடம் ஆவணி மாதம் 04 ம் நாள் **20.08.2021 வெள்ளிக்கிழமை** உத்திராடம் நட்சத்திரம் அன்று, ஸ்ரீ கவிச்சக்கரவத்தி ஒட்டக்கூத்தர் ஜீவசமாதியின் **831-வது குருபூஜை விழாவும் மற்றும் கால்கோள் விழாவும்** நடைபெற உள்ளதால். ஆன்மீக சான்றோர்கள் மற்றும் பக்தகோடிகள் கலந்து கொண்டு இறையருள், குரு அருள் பெற வேண்டுகிறோம்.

| நாள் | நேரம் | நிகழ்ச்சி |
|---|---|---|
| **20.08.2021 வெள்ளிக்கிழமை** | **காலை 10. 00** மணிக்கு | **கால்கோள் விழா** |
| | **காலை 10. 30** மணிக்கு | **ஸ்ரீ ஒட்டக்கூத்தர் ஜீவசமாதிக்கு சிறப்பு அபிஷேகம் மஹா தீபாராதனை நடைபெறும்** |
| | **மதியம் 01.00** மணிக்கு | **மஹேஸ்வர பூஜை நடைபெறும்** |

**சிறப்பு விருந்தினர்கள்**

உயர்திரு. **K.P.K. செல்வராஜ்** அவர்கள் – திருப்பூர்.

தலைவர் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

சிவத்திரு.**அ.ஜீவானந்தம்** அவர்கள் – தாராசுரம்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் ஒட்டக்கூத்தர் ஆராதனை விழா குழு செயலாளர்

உயர்திரு.**Lion.S.சிவா** அவர்கள் – தஞ்சாவூர்.

தலைவர் தஞ்சை மாவட்ட செங்குந்தர் கல்வி சங்கம்

**திருச்செங்கோடு பாவடி பஞ்சாயத்தாரி, நாட்டான்மைகாரர்கள் மற்றும் உறவுமுறைகாரர்கள்**

**திருச்செங்கோடு செங்குந்தர் முன்னேற்ற சங்கம்**

**திருச்செங்கோடு செங்குந்தர் இளைஞர் பேரவை**

திருச்செங்கோடு.

**ஸ்ரீ வீரபத்ர சுவாமி திருக்கோயில் மூன்று நிலை**

**ராஜகோபுர திருப்பணி குழுவினர்**

**ஒட்டக்கூத்தர் ஆன்மீக அறக்கட்டளை**

தாராசுரம், ஸ்ரீ வீரபத்ரசுவாமி திருக்கோவில் கண்காணிப்பாளர்

சிவத்திரு.**A.ஜீவானந்தம்** அவர்கள் செயலாளர்

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க ஒட்டக்கூத்தர் ஆராதனை விழா

**Cell : 86808 28922, 94868 44158**

**ஸ்ரீ கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் குருபூஜை விழா குழு**

தாராசுரம். **செல் : 99765 16466 / 94428 20687.**

**M.முத்தையன்**
பொருளாளர்

**D.இராஜேந்திரன்**
செயலாளர்

**P.ரமேஷ்குமார்**
துணை செயலாளர்

**S.சோலைமுத்து**
தலைவர்

**V.சுவாமிநாதன்**
துணை தலைவர்




# செங்குந்தர் நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தின் மூலம் கொரோனா கால நிவாரண உதவிகள்

திருநெல்வேலி மாவட்டம், அம்பாசமுத்திரம் தாலுகா உட்பட்ட இடைகால் கிராமத்தில் செங்குந்தர் நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தின் மூலம் கொரோனா கால நிவாரண உதவிகள் 07.07.2021 அன்று இப்பகுதி நெசவாளர்களுக்கு வழங்கப்பட்டது. கிளைச் சங்க தலைவர் விநாயகம் தலைமை வகித்தார், சங்க துணை தலைவர் அங்குச்சாமி வரவேற்பு நிகழ்த்தினார், சிறப்பு விருந்தினராக பாப்பாக்குடி துணை வட்டார வளர்ச்சி அலுவலர் சங்கரன், இடைகால் பஞ்சாயத்து செயலர் ராம சுப்பிரமணியன் நிவாரண பொருட்கள் வழங்கினர் மற்றும் நெசவாளர் கூட்டுறவுச் சங்க நிர்வகிகள் வீரபாகு, சுப்பிரமணியன், மாரி சங்கரம்மாள் ஏற்பாடுகளை செய்து இருந்தனர். செங்குந்தர் சொந்தங்கள் முக கவசம் மற்றும் சமூக இடைவெளி பின்பற்றி நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர்.



# வாழ்த்துக்கள்

திருவள்ளூர் மாவட்டம் பொதட்டூர்பேட்டை. மங்கலம் கிழார் தெருவைச் சேர்ந்த **மோதுகுலபாளையம் கோதண்ட முதலியார்** அவர்களின் மகன் **முனைவர் மோ.கோ. கோவை மணி** அவர்கள் தஞ்சை பல்கலைக்கழகத்தின் பதிவாளராகப் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளார். அவருக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**ஆயுள் உறுப்பினர் கட்டணம்: ரூ. 100**
**செங்குந்த மித்திரன் 15 ஆண்டு சந்தா: ரூ. 1000**

### வங்கி விவரம்:

**South Indian Sengunthta Mahajana Sangam**

| | | |
|---|---|---|
| SB A/c No | : | **020100050304358** |
| Bank | : | **Tamilnadu Mercantile Bank Limited** |
| Branch | : | George Town, Chennai - 600001 |
| IFSC | : | **TMBL0000020** |

**அல்லது**

**South Indian Sengunthta Mahajana Sangam**

| | | |
|---|---|---|
| SB A/c No | : | **527402010002485** |
| Bank | : | **Union Bank of India** |
| Branch | : | Armenian Street Branch, Chennai |
| IFSC | : | **UBIN0552747** |

**அல்லது எந்த வங்கியிலிருந்தும் மேற்கண்ட கணக்கின் பெயருக்கு DD எடுத்தும் அனுப்பலாம்.**

**பாவேந்தர் பாரதிதாசன் அறக்கட்டளை**
**Pavendar Bharathidasan Arakkattalai**

| | | |
|---|---|---|
| SB A/c No. | : | **420141716** |
| Bank | : | **Indian Bank** |
| Branch | : | MGT Branch, Thambu St, Chennai |
| IFSC | : | **IDIB000M002** |

# செங்குந்தர் மாளிகை

செங்குந்தர் மாளிகை தற்போது சீரமைப்பு பணிகள் மேற்கொள்ளப்பட்டு, தங்குவதற்கு ஏற்ற நிலையில் முழு சுகாதார, குடிநீர் வசதிகளுடன் செயல்பட்டு வருகிறது.

வெளியூர்களிலிருந்து வரும் உறவினர் பெருமக்கள் கீழ்க்கண்ட தொலைபேசி எண்ணை பயன்படுத்தி முன்பதிவு செய்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**தொலைபேசி எண்: 044-25226852**

## விடுதி கட்டணம்

| | | |
|---|---|---|
| சிங்கிள் ரூம் | : | ரூ. 250/– |
| டபுள்ஸ் ரூம் | : | ரூ. 500/– |
| டபுள்ஸ் ரூம் ஏ/சி | : | ரூ. 750/– |

**மாத வாடகைக்கும் அறைகள் தங்குவதற்கு விடப்படுகின்றன.**

| | |
|---|---|
| சிங்கிள் ரூம் (பொது) | ரூ. 6,000/– |
| முன்பணம் | ரூ. 30,000/– |
| சிங்கிள் ரூம் உறுப்பினர் | ரூ. 5,000/– |
| முன்பணம் | ரூ. 25,000/– |
| டபுஸ் ரூம் (பொது) | ரூ. 10,000/– |
| முன்பணம் | ரூ. 50,000/– |
| உறுப்பினர் | ரூ. 9,000/– |
| முன்பணம் | ரூ. 45,000/– |

தற்போது இரவு / பகல் முழு நேரமும் பணியாளர்கள் பணியாற்றி வருகிறார்கள்.

**– நிர்வாகம்**

# அறிவிப்பு

செங்குந்த மித்திரன் சந்தாதாரர்களுக்கு ஒரு அன்பான வேண்டுகோள்:

செங்குந்த மித்திரன் இதழ் தொடர்பான சந்தேகங்களுக்கும், புகார்களுக்கும் கீழ்க்கண்ட அலைபேசி எண்: **97911 17261**-க்கு தொடர்பு கொள்ளவும். செங்குந்த மித்திரன் இதழ் கிடைக்கப் பெறாதவர்கள் தங்கள் சந்தா எண், முகவரி மற்றும் அலைபேசி எண்ணுடன் அஞ்சலில் தெரிவிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறந்து போன சந்தாதாரர்களின் விபரங்களை சம்பந்தப்பட்ட குடும்பத்தினர் தெரிவிப்பதோடு, குடும்ப உறுப்பினர்கள் எவரேனும் ஒருவர் பெயரில், ஆதார் அடையாள அட்டை எண்–ஐ பயன்படுத்தி புதுப்பித்துக் கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

- பொதுச்செயலாளர்,

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

# அறிவிப்பு

திருமண தகவல் மையம் செவ்வாய் கிழமை தவிர அனைத்து நாட்களிலும் செயல்படும்.

ஜாதகப் பதிவுக் கட்டணம் (1 வருடம்) ரூ. 500/–

**அலுவலக நேரம்:**

தினசரி காலை 10.30 மணி முதல்
மாலை 05.00 மணி வரை

- பொதுச்செயலாளர்,

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்


# செங்குந்த மித்திரன்

RNI No. TNTAM/2000/03982

செங்குந்த மித்திரன் சீரார் இதழ்வாழி
எங்குந்தன் பேர்பரப்பும் ஈடில்லாப் - பொங்குந்தன்
கூத்தர் குலம் வாழி! கோலத் தமிழ் வாழி!
ஏத்துநலம் வாழி இசைந்து

- வாரியார் சுவாமிகள்

**ஜுலை 2021 மலர்: 21 இதழ்: 7**

**ஆசிரியர்:**

**K.P.K.செல்வராஜ்**

**சந்தா விபரம்**

தனி இதழ் : ரூ. 15/-

15 ஆண்டு சந்தா : ரூ. 1000/-

**1-12-2020 முதல் புதிய விளம்பரக் கட்டண விபரம்**

**கலர்**

| | | |
|---|---|---|
| நடுப்பக்கம் | : | ரூ. 15,000 |
| முன் உள்அட்டை | : | ரூ. 10,000 |
| பின் அட்டை | : | ரூ. 10,000 |
| பின் உள்அட்டை | : | ரூ. 10,000 |
| முழுப்பக்கம் | : | ரூ. 5,000 |
| அரைப்பக்கம் | : | ரூ. 2,500 |
| கண்ணீர் அஞ்சலி (B&W) | | ரூ. 3,500 |

**தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்**

South Indian Sengundha Mahajana Sangam

எண்.58, (ப. எண்.89), அரண்மனைக்காரன் தெரு, சென்னை-600001.

தொலைபேசி : 044 - 25226852

நிர்வாக அலுவலகம் (கடிதம் & தொடர்புக்கு)

வள்ளல் சபாபதி மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி வளாகம் (பச்சையப்பன் கல்லூரி பின்புறம்), எண்.25, ஆரிங்டன் சாலை, சென்னை–600030.

**Phone: 044 - 42957999, 97911 17261**

E-mail: senguntha mithiran@gmail.com

http://www.sengunthamithiran.in

# செங்குந்த மித்திரன் சந்தாதாரர்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்

- தங்கள் முகவரியில் தொலைபேசி எண்ணையும், மின் அஞ்சல் முகவரியையும் சேர்க்காத சந்தாதாரர்கள் தற்போது உடனடியாக பதிவு செய்யும்படி கேட்டுக் கொள்கிறோம்.
- இறந்து போன சந்தாதாரர்களின் விபரங்களை, அவர்களுடைய குடும்ப உறுப்பினர்கள் தலைமைச் சங்கத்திற்கு, (துக்க ஆதாரத்துடன்) உடன் தெரிவிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.
- செங்குந்த மித்திரன் இதழ் கிடைக்கப் பெறாத வாசகர்கள் தங்கள் புகாரை எழுத்து வடிவில் கடிதம் அல்லது E–mail மூலமாக தலைமை சங்கத்திற்கு தெரிவிக்கவும். தொலைபேசியில் தெரிவிப்பதை தவிர்க்குமாறு அருள் கூர்ந்து கேட்டுக் கொள்கிறோம்.
- தங்கள் தொலைபேசி எண்ணையும், மின் அஞ்சல் முகவரியையும் ஏற்கனவே அனுப்பி உள்ள சந்தாதாரர்கள் மீண்டும் அனுப்ப வேண்டாம்.
- இருப்பிட மாற்றம் செய்யும் சந்தாதாரர்கள் உடனுக்குடன் தங்கள் முகவரி மாற்றத்தை அலுவலகத்திற்கு தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். மாதந்தோறும் செங்குந்த மித்திரன் இதழ்கள் திரும்பி வருவதை இதன் மூலம் தடுக்க முடியும்.
- வர்த்தகம் மற்றும் திருமண வரன் விளம்பரங்கள் அளிக்கும் வாடிக்கையாளர்கள் தங்களுக்கு விரைவில் இதழ் கிடைக்க வேண்டும் என்று கருதினால் ரூ.60/– ஐ கொரியர் கட்டணமாக தங்கள் விளம்பர கட்டணத்துடன் சேர்த்து அனுப்பிவைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.
- சங்க நிகழ்ச்சிகளை செங்குந்த மித்திரன் இதழில் வெளியிட விரும்பும் உறுப்பினர்கள், நிர்வாகிகளின் பரிந்துரையுடன் senguthamithiran@gmail.com என்ற மின்அஞ்சல் முகவரிக்கு அனுப்பி வைக்கவேண்டும். வாட்ஸ்அப் மூலம் அனுப்பப்படும் செய்திகள் கண்டிப்பாக செங்குந்த மித்திரன் இதழில் பிரசுரிக்க ஏற்க இயலாது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.
- மாவட்ட, கிளைச் சங்க உறுப்பினர்கள் தங்கள் பகுதியில் வர்த்தக, திருமண மற்றும் இல்ல விழாக்கள், நினைவஞ்சலி விளம்பரங்களைப் பெற்று அனுப்புவது செங்குந்த மித்திரன் வளர்ச்சிக்கு பேருதவியாக இருக்கும் என்பதை மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கேட்டுக் கொள்கிறோம்.
- செங்குந்த மித்திரன் இதழ் புதுப்பிக்காத வாசகர்கள் மேலும் காலம் தாழ்த்தாமல் உடன் புதுப்பிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம். சந்தா சேர்க்கை மற்றும் பதிவு குறைவாக இருக்கும் இந்த நேரத்தில் இதழ் தங்கு தடையின்றி இப்போதுள்ள பொலிவுடன் தொடர்ந்து வரவேண்டும் என்றால் அதற்கான முயற்சியும், நடவடிக்கையும் வாசகர்கள் கையிலும், நிர்வாகிகள் மனதிலும்தான் உள்ளது என்பதை இந்தத் தருணத்தில் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

தொடர்ந்து தங்கள் நல் ஒத்துழைப்பையும், ஆதரவையும் வேண்டுகிறோம்.

**R.P.குமரகுருபரன்,** பொதுச்செயலாளர்,
தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின்
## அன்பார்ந்த உறவினர்களுக்கு ஓர் வேண்டுகோள்!

வணக்கம். செங்குந்தர் மாளிகை சீரமைப்புப் பணிகள் தற்போது நடைபெற்று வருகின்றன. பகல், இரவு எந்நேரமும் (24x7) முழு நேரப் பணியாளரால் பராமரிக்கப்பட்டு வருகிறது. தொலைபேசி செயல்படுகிறது. அறைகள் தினசரி சுத்தம் செய்யப்படுகின்றன. மின்சாரம், குடிநீர், அனைத்தும் தங்கு தடையின்றி வழங்கப்பட்டு வருகிறது. குளிர் சாதன வசதியும் தற்போது பழுது நீக்கப்பட்டுள்ளது. அறைகளில் வந்து தங்குவோர் எண்ணிக்கையும் கூடி வருகிறது.

தற்சமயம் படுக்கை விரிப்பான் (Bed Sheets), போர்வை, தலையணைகள் கூடுதலாக தேவைப்படுகின்றன. சுடுதண்ணீர் வசதி செய்ய வேண்டி உள்ளது. லிப்ட் புதியதாக வாங்க வேண்டி உள்ளது. அறைக்கு தங்க வரும் மூத்த குடிமக்கள் (Senior Citizens) மிகவும் சிரமப்படுகிறார்கள். மாளிகையின் முன்புறமும் மற்றும் முகப்பு பகுதியில், டைல்ஸ் பதிக்கப்பட வேண்டும். பெயர்பலகை பல வருடங்களாக தேய்ந்த நிலையில் உள்ளது. வண்ணப்பூச்சும் (Painting) செய்யப்பட வேண்டும். சொத்து வரி மற்றும் மெட்ரோ வாட்டர் பில் சுமார் 2 இலட்சத்துக்கும் கூடுதலாக முன் ஆண்டிலிருந்து நிலுவையாக உள்ளது. நிர்வாகக்குழு மற்றும் செயற்குழுவில் பராமரிப்பு பணிகளை மேற்கொள்ள அனுமதி பெறப்பட்டிருந்தாலும், இதற்கு குறைந்தது ரூ.10 இலட்சத்துக்கும் கூடுதலாக நிதி வேண்டும் என்ற நிலையில், தற்போதைய நிதி நிலையும், கையிருப்பும் பற்றாக்குறையாக உள்ளது. ஆகவே உறவினர்களும், நிர்வாகிகளும் மனமுவந்து நன்கொடைகள் வழங்கினால் மேற்படி செய்ய வேண்டிய பணிகளை விரைந்து முடித்து, முன்பு போல 'செங்குந்தர் மாளிகை' புதுப்பிக்கப்பட்டு போதிய வருவாயை ஈட்ட முடியும்.

செங்குந்தர் மாளிகை புனரமைப்பு நன்கொடை என்ற பெயரில், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் பெயரில் பணவிடை/ காசோலை மற்றும் இதர வங்கி பரிவர்த்தனைகள் மூலம் தேவைப்படும் நிதியை கணிசமான அளவில் இந்தியன் யூனியன் வங்கி அல்லது தமிழ்நாடு மெர்க்கன்டைல் வங்கி சேமிப்பு கணக்கை பயன்படுத்தி அனுப்பி வைக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**வங்கி விபரம்**

Name : **South Indian Senguntha Mahajana Sanmgam**
Bank : **Union Bank of India** Branch : **Armenian Street**
A/c No : **527402010002485** IFSC : **UBIN0552747**

Name : **South Indian Senguntha Mahajana Sanmgam**
Bank : **Tamilnadu Mercantile Bank Limited** Branch : **George Town**
Ac No : **020100050304358** IFSC : **TMBL0000020**

இப்படிக்கு,

**தலைவர், பொதுச்செயலாளர், பொருளாளர் மற்றும் மண்டல நிர்வாகிகள்**

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## ஆயுள் உறுப்பினர்,
## செங்குந்த மித்திரன் ஆயுள் சந்தா
## தகவல் படிவம்

ஆயுள் உறுப்பினர் எண் :

செங்குந்த மித்திரன் சந்தா எண் :

புகைப்படம்

1. பெயர்
2. தந்தை / கணவர் பெயர்
3. வயது பிறந்த தேதி
4. கல்வி 5. இரத்த வகை
6. தொழில்
7. முகவரி

   அஞ்சல் எண்
8. மாவட்டம்/மாநிலம்
10. மொபைல் எண்
11. வாக்காளர் அட்டை எண்
12. ஆதார் எண்
13. மின்னஞ்சல் முகவரி

நமது சங்கத்தின் சட்ட திட்டங்களை மதித்து நடப்பேன் எனவும், செங்குந்த சமுதாய வளர்ச்சிப் பணிகளுக்கு என்னால் இயன்றளவு ஒத்துழைப்பேன் எனவும் மேற்கூறிய தகவல்கள் அனைத்தும் உண்மை எனவும் உறுதியளிக்கிறேன்.

நாள்: கையொப்பம்

**அனுப்பவேண்டிய முகவரி:**

**பொதுச்செயலாளர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்,**
**எண்.25, ஆரிங்டன் சாலை, வள்ளல் சபாபதி மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி வளாகம்**
**(பச்சையப்பன் கல்லூரி பின்புறம்), சென்னை-600030**




# தலைவர் சுற்றுப்பயண விபரம்

## ஆகஸ்ட் 2021

**15-08-2021 ஞாயிறு காலை 9:00 மணி**

**சென்னை:**

வள்ளல் சபாபதி மெட்ரிக் பள்ளியில் சுதந்திர தினவிழா

**15-08-2021 ஞாயிறு மதியம் 3:00 மணி**

**செஞ்சி:**

செஞ்சி கிளைச் சங்கப் பொதுக்குழு மற்றும் தலைமைச் சங்க நிர்வாகிகளுக்குப் பாராட்டு விழா

**20-08-2021 வெள்ளி காலை 8.00 மணி**

**தர்மபுரி:**

நெசவாளர் நகர் கிளைச் செயலாளர் திரு.K.தினகரன் செங்குந்தர் மகன் திருமண விழா

**20-08-2021 வெள்ளி மதியம் 12.00 மணி**

**தாராசுரம்:**

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரின் 831வது குருபூஜை விழா மற்றும் ராஜகோபுர கால்கோள் விழா

**27-08-2021 வெள்ளி காலை 7.00 மணி**

**குரோம்பேட்டை:**

தெ.செ.ம. சங்கத்தின் ஆன்மீக அணி துணை அமைப்பாளர் திரு. S.சுரேஷ்பிரியன் செங்குந்தர் திருமண விழா

## செப்டம்பர் 2021

**08-09-2021 புதன் காலை 6:00 மணி**

**கண்டாச்சிபுரம் - விழுப்புரம்**

வீரங்கிபுரம் கிளைச் சங்க நிர்வாகி திரு.S.கண்ணன் செங்குந்தர் மகன் திருமண விழா

**08-09-2021 புதன் காலை 11:00 மணி**

**மதுரை:**

திருவாப்புடையார் கோயில் செங்குந்தர் உறவின்முறை திருமண மண்டபம் திறப்பு விழா

**09-09-2021 வியாழன் காலை 8:00 மணி**

**காஞ்சிபுரம்:**

காஞ்சிபுரம் மாவட்ட செ.ம.சங்கப் பொருளாளர் திரு. D.தணிகாசலம் செங்குந்தர் மகன் திருமண விழா

நிகழ்ச்சிகள் அனைத்தும் அரசு விதிமுறைகளின்படி சமூக இடைவெளியைக் கடைப்பிடித்து நடத்தப்படும்



# வள்ளல் சபாபதி மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியில் கல்வி வளர்ச்சி நாள்

பெருந்தலைவர் காமராஜர் அவர்களின் 119வது ஆண்டு பிறந்தநாள் 15.07.2021 அன்று வள்ளல் சபாபதி மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியில் "கல்வி வளர்ச்சி நாளாக" சிறப்பாக கொண்டாடப்பட்டது. நிகழ்ச்சிக்கு பள்ளியின் செயலாளரும், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் பொதுச்செயலாளருமாகிய R.P.குமரகுருபரன் தலைமை ஏற்று விழா சிறப்புரை ஆற்றினார். முன்னதாக பள்ளியின் முதல்வர் பாலசுப்ரமணியன் வரவேற்புரை நல்கினார். திருமதி.பார்வதி, ஞானதீபா, ஜெயசித்ரா, முத்துலட்சுமி, கலைவாணி உள்ளிட்ட ஆசிரியைகள் விழாவில் பங்கேற்றனர். அரசியல் வரலாற்றில் கிங் மேக்கராக இருந்து பல தலைவர்களை உருவாக்கியதுடன், ஏழை மாணவர்களுக்கு மதிய உணவளித்து, கிராமங்கள் தோறும் பள்ளிகள் தொடங்கி கல்வியில் வளர்ச்சி ஏற்படுத்தியும், வேளாண்மை செழிக்க அணைக்கட்டுகளையும், நீர் தேக்கங்களைக் கட்டியும் நல் ஆட்சி செய்த ஊழல் புகார்களுக்கு சிக்காத கர்ம வீரர் என்று அனைவரும் பாராட்டி அவர்தம் நினைவு கூர்ந்தனர்



## வாழ்த்துக்கள்

தஞ்சை மாவட்ட செங்குந்தர் கல்விச் சங்கத்தின் தலைவர் **Lion S.சிவா** அவர்களின் மூத்த மருமகள் **திருமதி. திவ்யா ஜெய்கார்த்தி** அவர்கள் தமிழ்நாடு காவல் துறையில் D.S.P. பணிக்கு பயிற்சி பெற்று 29.07.2021 அன்று சென்னை பயிற்சி மையத்தில் தமிழக முதல்வர் திரு. மாண்புமிகு மு.க. ஸ்டாலின் அவர்களிடம் D.S.P. பதவி நியமனச் சான்று பெற்றமைக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஆகஸ்டு மாதத்தின் அற்புதங்கள்!

நாடாவை ஓடவிட்டு நாட்டின் மானம்
நாளுமிங்குக் காக்கின்ற நல்லோர் போற்றும்,
தேடாத பெருஞ்செல்வம் திருவை நல்கும்
தீந்தமிழர் கைத்தறியை நெய்து ஈக,
நாடாமல் இருந்திட்டால் நாடும் வெட்கும்
நாகரீகம் இலையென்று நகைத்துக் கூறும்,
ஆடாமல் அசைந்தபடி துணியை நெய்யும்
அகிலத்தில் கைத்தறியின் தினமாம் ஏழு!

நைந்துவரும் மானுடத்தின் நலத்தைப் பேண
நாடோறும் சிந்தித்து செம்மை குந்தர்
மைந்தனாக அவதரித்தார் மகரிஷி ஞானி,
மன்பதையின் பெருமையில் மகிழ்ந்த சான்றோன்,
ஐந்தொழுக்கப் பண்பாட்டை மக்கள் ஏற்க
ஆய்ந்தறிந்து பலகாலம் அல்லல் பட்டார்,
பைந்தமிழின் தேன்பாகைக் படைத்துத் தந்த
பார்போற்றும் அருட்தந்தை பிறந்த மாதம்!

செங்குந்தர் குலத்துதித்து செகமே போற்ற
சீர்மையால் நல்லறிவைச் செழிக்க வைத்து,
பங்களிப்பை நம்மவர்க்குப் பரிசாய்த் தந்து
பாங்காக வாழ்வதற்கும் பாதை ஈந்தார்,
திங்களொடு கதிரவனின் ஒளியைச் சேர்த்து
தித்திக்கும் தேனமுத சுவையைக் கோத்து,
எங்களின குருவான வாரி யாரே
இம்மாதம் பிறந்திட்டார் இன்பம் சேர்த்தார்.

ஓடிவரும் காவிரியில் உணர்வு பொங்க
உற்சாகம் பெருக்கெடுக்க உள்ளம் ஈர்க்க,
ஆடிப்பெ ருக்கென்று அகமும் துள்ள
அனைவருமே ஆற்றோரம் நீரும் ஆடி,
தேடிவரும் செல்வமதைத் தேக்கி சுற்றம்
தேவைக்காய்க் கொடுத்தனுப்பி மகிழ்வு கொள்ள
பாடியிங்குப் பரவசமும் கொண்டு இன்பம்
பகிர்ந்தபடி திளைக்கின்ற புனித மாதம்!

- கவிஞர். அ.முத்துசாமி, தாரமங்கலம்.





# வாழ்த்துக்கள்

திருவாரூர் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கத்தின் முன்னாள் பொதுச்செயலாளர் புலவர் தெய்வத்திரு. **மு.பக்கிரிசாமி** அவர்களின் புதல்வன் **திரு. ப.வீரமணி B.E.** அவர்கள் தமிழ்நாடு காவல்துறையில் உதவி ஆய்வளராக (சட்டம் ஒழுங்கு) தேர்வு செய்யப்பட்டு பணி நியமன ஆணை பெற்றுள்ளமைக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# வாழ்த்துக்கள்

பாபநாசம் நகர செங்குந்தர் நலச் சங்கத்தின் செயற்குழு உறுப்பினரும், நகர இளைஞரணி அமைப்பாளரும், தஞ்சை மாவட்ட செங்குந்தர் கல்விசங்கத்தின் இளைஞர் அணி மண்டல செயலாளருமான **திரு. கோ. சீனிவாசன் செங்குந்தர்** அவர்கள் பாபநாசம் ரோட்டரி சங்கத்தின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டமைக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# பொன்விழா திருமண வாழ்த்து

நாள்: 12-07-2021



**தம்பதிகள்:**

**திரு. A.கதிர்வேல்**

**திருமதி. K.ஜெயலட்சுமி**

அகம் மகிழ்ந்து
முகம் மலர்ந்து
புன்னகை தவழ
பொலிவுடன் வாழ்க!
என வாழ்த்தும்...



மகன் – மருமகள்:

**K.பத்மராஜ் - P.அன்பரசி**

பேரன் – பேத்திகள்:

**S.சுந்தர் விஷ்ணு**

**P. அஷ்விகா பாரதி**

**P. சத்யாஸ்ரீ**

**P.சந்தியாஸ்ரீ**

10/14, இளங்கோ லே-அவுட், காங்கேயம் கிராஸ் ரோடு, திருப்பூர் – 641 604.
கைபேசி: 98422 42293, 99449 21269



புலவர் கா.கோவிந்தன் செங்குந்தர் தமிழிலக்கிய உலகில் மிகச்சிறந்த அறிஞராக விளங்கித் தமிழகச் சட்டப்பேரவையில் தலைவராக அமர்ந்து கடமையாற்றி அனைவராலும் மதிக்கத் தகுந்தவராக விளங்கியவர். படிக்கும் காலத்திலேயே கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, ஞானியார் அடிகள், மறைமலையடிகள் உள்ளிட்டவர்களுடன் பழகிய பெருமைக்கு உரியவர். செய்யாறு பகுதியில் தமிழ் உணர்வு தழைத்து வளரப் பாடுபட்டவர்களில் கா.கோவிந்தனாரின் பங்களிப்பு மிகுதி. பெரியார் பிள்ளைத்தமிழ் எழுதிய மாவண்ணா தேவராசன் இவருக்கு அணுக்கமாக இருந்தவர்.

# செங்குந்தர் குலச் செம்மல்
# புலவர் திரு. கா.கோவிந்தன் செங்குந்தர்

இருபதாம் நூற்றாண்டுத் தமிழகத்தின் வரலாற்றில் ஒரு சிறப்பிடத்தைப் பெறத்தக்க வகையில், நல்ல தமிழ் அறிஞராக, வரலாற்றுத் திறனாய்வாளராக, செந்தமிழ்ப் பேச்சாளராக, இலக்கியப் படைப்பாளராக, பாதை மாறாத பகுத்தறிவுவாதியாக, அப்பழுக்கற்ற அரசியல் தலைவராக, தமிழ்நாடு சட்டமன்றப் பேரவைத் தலைவராக, என பல்திறன் படைத்த நற்றமிழ்ப் புலவராக விளங்கியவர், புலவர் கா. கோவிந்தன் செங்குந்தர் அவர்கள்.

"தமிழுக்கும், தமிழ்ப் புலவர்கட்கும், தமிழ் நாட்டுக்கும் தொண்டாற்றத் தன்னையே அர்ப்பணித்தவர்" என்று பேரறிஞர் அண்ணா அவர்களால் பாராட்டப்பெற்ற பேறு பெற்றவர்,

பைந்தமிழ்ப் புலவராய் உயர்ந்து, சங்கத் தமிழ் ஏடுகளிலெல்லாம் திளைத்து, வரலாற்றுக் கண் கொண்டு ஆய்ந்து, தொல்காலத் தமிழர் வாழ்வை இக்காலத்தவரும் தெளிந்திடுமாறு தேன்தமிழ்ச் சுவடிகளாக வரைந்து வழங்கிய பெருமை உடையவர்.

புலவர்களுள் பெரும் புலவராய் விளங்கி, திருவண்ணாமலை குன்றக்குடி ஆதீனத்தாரின் 'புலவரேறு' பட்டம், தமிழக



அரசின் 'திரு.வி.க. விருது', மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' பட்டம் போன்றச் சிறப்புகளைப் பெற்ற புலவர் அவர்களின் 'தமிழ்ப்பணி' பொன்விழாக் கண்ட பெருமையினையுடையது.

வட ஆர்க்காடு மாவட்டம் (இன்றைய திருவண்ணாமலை மாவட்டம்) செய்யாறு பகுதியில் வாழ்ந்த திரு.காங்கன் முதலியார் – திருமதி. சுந்தரம் அம்மாளுக்கு மகனாக 15.04.1914 அன்று புலவர் கா.கோவிந்தன் செங்குந்தர் பிறந்தார்.

## கல்வி :

இவர் தொடக்கக் கல்வியைச் செய்யாறு உயர்நிலைப்பள்ளியில் பயின்றார். இளம் முல்லை நாயகி பிள்ளைத் தமிழ் என்ற பொருள் செறிந்த நூலைப்பாடியவர் பானுகவியார். அத்தகைய புலமை வாய்ந்த பானுகவியாரை வாதத்தில் வென்ற தமிழாசிரியர் மகாவித்வான் வீரபத்திரப்பிள்ளையிடம் 1932 இல் எட்டாம் வகுப்பு பயின்றார். அவர் மாற்றலாகி வேலூருக்குச் சென்றபொழுது அந்த இடத்திற்கு ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் பணிக்கு அமர்ந்தார்.



ஔவை. சு.துரைசாமி பிள்ளை அவர்கள் பாடம் நடத்தும் முறை புதுமையானது. அன்று நடத்த வேண்டிய பாடத்திற்கான குறிப்புகளை முன்பாகவே தேர்வு செய்யாமல் பாடம் எடுக்கமாட்டார்; பாக்களை இசையோடு பாடுவார்; சொல் பிரித்து பொருள் விளங்கப் பாடுவார்; புதிய பாடம் எடுத்துக் கொள்வதற்கு முன்னர் பழைய பாடத்தை மாணவர் எந்த அளவு புரிந்து கொண்டுள்ளனர் என்பதை அறிந்து கொள்ளச் சில பல கேள்விகளைக் கேட்பார். அவரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களை வகுப்பிலும் மாலையில் வீட்டிலும் கற்றுப் புலமை பெற்றார். 1934 இல் பள்ளி இறுதி வகுப்பை முடித்ததும் அவர் தந்த பயிற்சியின் துணையால் பத்துப்பாட்டு, எட்டுத்தொகையினை தானே படிக்கத் தொடங்கினார்.

## தமிழ் உணர்வு :

கா.கோவிந்தன் அவர்கள் 1935 இல் 'காவிரி' என்ற தலைப்பில் கட்டுரை எழுதி தஞ்சை கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடாகிய "தமிழ்ப் பொழி"லுக்கு அனுப்பினார். இதுவே இவரின் முதல் எழுத்துப்பணி. மாணவப் பருவத்தில் வாலி





வழக்கு என்ற நூல் எழுதிய புரிசை முருகேச முதலியார் அவர்கள் முன்னின்று நடத்திய பானுகவி மாணவர் கழகம் உள்ளிட்ட தமிழ் அமைப்புகளில் உரையாற்றிய பெருமைக்கு உரியவர்.

ஆண்டுதோறும் திருவத்திபுரத்திற்கு வந்து செல்லும் ஞானியார் அவர்களின் தலைமையில் "மணிவாசகர் அளித்த இரு வாசகம்" என்ற தலைப்பில் பேசுமாறு இவரை பணித்து விட்டார்கள். "தந்தது உன் தன்னை, கொண்டது என் தன்னை" என்ற–திருவாசகத் தொடரை எடுத்துக் கொண்டு, தருதல் என்றால், கொடுப்பவன் தாழ்ந்து, வாங்குவோன் உயர்ந்து நிற்கும் போது ஆள வேண்டிய சொல், இங்கு 'தந்தது உன் தன்னை' என கூறியதன் மூலம், சிவனைத் தாழ்ந்தவனாகவும், தன்னை உயர்ந்தவனாகவும் மதித்துள்ளாரே மணிவாசகர், இது ஏன் என்று கேள்வியைக் கேட்டு விட்டுப் பேச்சை முடித்துக் கொண்டார். தலைமையுரையில், ஞானியார் அவர்கள் "கோவிந்தன் பேசிய நேரம்



சிறிய நேரம் என்றாலும், என் சிந்தனைக்கு மட்டுமல்லாமல் அனைவர் சிந்தனைக்கும் அரிய வேலை கொடுத்துவிட்டான்'' எனக் கூறிப் பாராட்டினார்

பள்ளியில் மற்றொரு தமிழாசிரியர் திரு. பாலசுந்தர நாயகர் அவர்கள் வித்துவான் தேர்வில் வெற்றி பெற்றார். அதற்கு ஒரு பாராட்டு விழா நடத்த தலைமை ஆசிரியரின் அனுமதி கேட்டதற்கு அவர் மறுத்து விட்டார். பானுகவி மாணவர் கழகமும் விழா நடத்த முன் வரவில்லை. அதனால் ஔவைத் தமிழ் மாணவர் கழகம் என்ற புதிய கழகத்தைத் தொடங்கி அவருக்கு மிகப் பெரிய பாராட்டு விழாவினை நடத்தினார்.

ஓராண்டு கழிந்தது; 1936இல் முதலாண்டு விழா நடத்த முடிவு செய்து தலைமைக்கு மறைமலை அடிகளாரை அழைத்து வந்து பெரிய பந்தல் போட்டு விழாவை நடத்தினார்.

வித்துவான் பட்டம் பெற்ற பின்னர் பி.ஓ.எல். பட்டம், பெற வேண்டும் என்ற ஆசை எழுந்தது. கல்லூரி சென்று படிக்காமல் வீட்டிலிருந்தே தேர்வு எழுதுவதானால் 3ஆண்டு ஆசிரியராகப் பணி புரிந்திருக்க வேண்டும்; தேர்வுக்கு மனுச் செய்யும்போது ஆசிரியராக இருக்க வேண்டும் என்பது பல்கலைக் கழக விதி. அதனாலும், வேலூரில் இவரின் பழைய தமிழாசிரியர் சென்ற அதே பள்ளியில் ஆசிரியராக 1942–இல் சேர்ந்து 1944 வரை பணி புரிந்தார். அங்கும் தமிழ்ப்பணி தொடர்ந்தது.

இவர் தமிழ் ஆங்கில மொழிகளில் வல்லவர். வேலூரில் பணிபுரிந்து கொண்டிருந்த பொழுது கழக ஆட்சியர் சுப்பையா பிள்ளை அவர்கள் சென்னையில் தெ.பொ.மீனாட்சி சுந்தரம் அவர்கள் தலைமையில் கூட்டிய நற்றிணை மாநாட்டில்



பாலை என்ற தலைப்பில் சொற்பொழிவு ஆற்றினார். அதன் பிறகு அவரின் நட்பு வளர்ந்தது. இவரின் வேண்டுகோளுக்கு இணங்க இலக்கியம் தொடர்பான நூல்களை எழுதினார்.

புலவர் கா.கோவிந்தனாரின் முதல் நூல் 'திருமாவளவன்' என்னும் பெயரில் 1951 இல் வெளிவந்தது. அதன் பிறகு சங்க காலப்புலவர் வரிசை என்ற வரிசையில் 16 நூல்களையும் அரசர் என்ற வரிசையில் ஆறு நூல்களையும் வெளியிட்டார். புலவர் வரிசையின் முதல்நூல் 1952 இலும், அரசர் வரிசையில் கடைசி நூல் 1955 இலும் வெளிவந்தன.

இவரின் எழுத்துப் பணி தொடர, மலர் நிலையம், வள்ளுவர், பண்ணை, அருணா பதிப்பகம் என்ற வெளியீட்டார் மூலம் பல நூல்கள் வெளி வந்தன. அரசியல் பணிகளுக்கிடையே கால்டுவெல் அவர்களின் ஒப்பிலக்கண மொழி பெயர்ப்பு




1959ல் வள்ளுவர் பண்ணை மூலம் வெளிவந்தது.

1990 ஏப்ரல் 15ஆம் நாளன்று, இவரின் ஐம்பதாவது நூலாக, திரு. பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் தமிழர் வரலாறு மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப் பெற்றது. 1991 இல் வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதர் அவர்களின் Orgin and Spread Tamils என்ற நூலை தமிழரின் தோற்றமும் பரவும் என்ற தலைப்பிலும், பி.டி.சீனிவாச ஐயங்காரின் Pre Aryan Tamil Culture என்பதை ஆரியர்க்கு முந்திய தமிழர் பண்பாடு என்ற தலைப்பிலும் மொழிபெயர்த்தார். அவரின் மற்றொரு நூலான Stone Age In India என்பதை இந்தியாவில் கற்காலம் என்ற பெயரில் மொழிபெயர்த்தார்.

## அரசியல் :

சிறுவயது முதல் தனித்தமிழ் இயக்கத்திலும் நீதிக்கட்சியிலும் ஈடுபாடு கொண்டிருந்தார். 1938 இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பங்கேற்றார். திராவிடர் கழகத்திலிருந்து பிரிந்து சென்று அண்ணா, திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தொடங்கிய போது அதில் இணைந்தார். 1952 சட்டமன்றத் தேர்தலில் திமுக ஆதரவு வேட்பாளருக்காக செய்யாறு பகுதியில் பிரச்சாரம் செய்தார். 1958 இல் திருவத்திபுரம் (செய்யாறு) பேரூராட்சி உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1962 சட்டமன்றத் தேர்தலில் செய்யாறுத் தொகுதியில் போட்டியிட்டு வெற்றி பெற்றார். 1967, 1971 மற்றும் 1977 தேர்தல்களிலும் அதே தொகுதியிலிருந்து திமுக சார்பாகப் போட்டியிட்டு வென்றார். 1967–69 இல் சட்டமன்றத் துணைத் தலைவராகப் பணியாற்றினார். 1969–71 மற்றும் 1973–77 காலகட்டங்களில் சட்ட மன்றத் தலைவராகப் பணியாற்றினார். தமிழக சட்டமன்ற வரலாற்றில் அதிக ஆண்டுகள் சட்டப்பேரவைத் தலைவராக பதவி வகித்தவர் என்ற பெருமைமிக்கவர்.

புலவர் கா.கோவிந்தன் அவர்கள், திமுகவில் பல கட்சிப் பொறுப்புகளை வகித் துள்ளார். அக்கட்சி நடத்திய பல்வேறு போராட்டங்களில் பங்கேற்று பல முறை சிறை சென்றார். 1984 நாடாளுமன்றத் தேர்தலில் அரக்கோணம் மக்களவைத் தொகுதியிலிருந்து போட்டி யிட்டு வெற்றி வாய்ப்பை இழந்தார்.

தமிழ்ப் பணியிலும் அரசியல் பணியிலும் அயராது பாடுபட்ட புலவர் கோவிந்தன் அவர்கள் 1991 ஜூலை 1ஆம் நாளன்று செய்யாறில் உள்ள தமது இல்லத்தில் காலமானார்.

'என் தமிழ்ப்பணி' என்ற தலைப்பில், புலவர் எழுதிய கடைசி கட்டுரையில், "என் எழுத்துப் பணி தொடரும். குறள் பற்றி, சங்க



இறவாத புகழுடைய இலக்கியங்கள் பலவற்றைத் தமிழன்னைக்கு அணி செய்ய அளித்துவிட்டுச் சென்றுள்ளார்.

“தமிழுக்குத் தொண்டு செய்வார் சாவதில்லை” என்றார் பாவேந்தர். தம் வாழ்நாள் முழுவதும், காலம் கரம் பிடித்து அழைத்துப் போன அந்தக் கடைசி நொடி வரை, தமிழ்ப் பணி ஆற்றிய புலவர் அவர்கள் வாழ்வார்; அவர் தமிழ் உலகிற்கு அளித்துச் சென்றுள்ள இலக்கியச் செல்வங்கள் உள்ளவரை என்றென்றும் நிலைத்து வாழ்வார்; தமிழறிந்தோர் நெஞ்சமெல்லாம் நிலைத்து வாழ்வார் என்பது உறுதி!

இலக்கியங்கள் பற்றி பல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத்துள்ளேன். “கல்வி கரையில, கற்பவர் நாள் சில” காலம் இடம் தந்தால், என் எழுத்துப் பணி தொடரும்” என்று அவர் தம் தமிழ்ப் பணியைத் தொடர வேண்டும் என்ற தனியா ஆவலை வெளியிட்டுள்ளார். ஆனால், காலம் இடம் தரத் தவறிவிட்டதனால், முற்றுப்பெறாத நிலையிலே அவருடைய எழுத்துப் பணி எச்சமாகவே நின்று போயிற்று! காலம் செய்த கொடுமை அது!

தமிழால் உயர்ந்து, தம் தமிழ்ப்பணி மூலம் தமிழுக்கும். உயர்வு தேடித் தரும் வகையில் எழுத்துலகம் நினைவு கொள்ளும் வண்ணம் நூற்பணியாற்றிய புலவர் அவர்கள், செத்தும் பொருள் கொடுத்த சீதக்காதி வள்ளல் போலத் தம் மறைவிற்குப் பின்னும் தமிழுக்கு அணி செய்யும் வகையில் பல இலக்கியப் படைப்புகளைத் தம் கையெழுத்து வடிவிலே அளித்துச் சென்றுள்ளார்.

*“மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்*
*தம் புகழ் நிற்இத் தாம் மாய்ந்தனரே”*

என்ற புறநானூற்று மொழிகளுக்கேற்ப, புகழுடம்பு பெற்றுவிட்ட புலவர் பெருந்தகை,

தமிழக அரசு இவரின் பல நூல்களை நாட்டுடைமையாக்கியுள்ளது

புலவர் அவர்களின் பணியை சங்க இலக்கிய ஆய்வுப் பணி, மொழி பெயர்ப்புப்பணி, அரசியல் பணி என்று மூன்று வகைப்படுத்தலாம்.

## இவர் 71 நூல்களை எழுதியுள்ளார் அவற்றுள் சில :

**சங்க காலப்புலவர் வரிசை**

01. நக்கீரர்
02. பரணர்
03. கபிலர்
04. ஔவையார்
05. பெண்பாற் புலவர்கள்
06. உவமையாற் பெயர் பெற்றோர்
07. காவல பாவலர்கள்
08. கிழார்ப்பெயர் பெற்றோர்

09. வணிகரிற் புலவர்
10. மாநகர்ப் புலவர்கள்– 1
11. மாநகர்ப் புலவர்கள்– 2
12. மாநகர்ப் புலவர்கள்– 3
13. உறுப்பாலும் சிறப்பாலும் பெயர் பெற்றோர்
14. அதியன் விண்ணாத்தனார் முதலிய 65 புலவர்கள்
15. குட்டுவன் கண்ணனார் முதலிய 80 புலவர்கள்
16. பேயனார் முதலிய 39 புலவர்கள்
17. இலக்கிய வளர்ச்சி
18. இலக்கியப் புதையல் 1 நற்றிணை விருந்து
19. இலக்கியப் புதையல் 2 குறுந்தொகைக் கோவை
20. குறிஞ்சிக்குமரி
21. முல்லைக்கொடி
22. மருதநில மங்கை
23. நெய்தற் கன்னி
24. பாலைச்செல்வி
25. கூத்தன் தமிழ்
26. சாத்தன் கதைகள்
27. திருக்குறள் சொற்பொழிவுகள்
28. மாதரார் தொழுதேத்தும் மாண்புடையாள்
29. காவிரி – கட்டுரைத்தொகுதி
30. சிலம்பொலி
31. புண் உமிழ் குருதி
32. அடுநெய் ஆவுதி
33. கமழ்குரல் ஆவுதி
34. சுடர்வீ வேங்கை
35. வடு அடும் நுண் அயிர்
36. முல்லை
37. வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி
38. மனையுறை புறாக்கள்
39. பெரும்பாணாற்றுப்படை – விளக்கவுரை
40. புலாஅம் பாசறை
41. கட்டுரைத்தொகுப்பு

**இலக்கணம்**

42. கால்டுவெல் – திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்– தமிழாக்கம்
43. செந்தமிழ் எழுதப் பயில

**வரலாறு**

44. திருமாவளவன்

**சங்க கால அரசர் வரிசை**

45. சேரர்
46. சோழர்
47. பாண்டியர்
48. வள்ளல்கள்
49. அகுதை முதலிய நாற்பத்து நால்வர்
50. திரையன் முதலிய இருபத்து ஒன்பதின்மர்
51. அறம் உரைத்த அரசர்
52. கலிங்கம் கண்ட காவலர்
53. இலக்கியம் கண்ட காவலர்
54. தமிழர் தளபதிகள்
55. தமிழகத்தில் கோசர்கள்
56. கழுமலப் போர்
57. தமிழர் வாழ்வு
58. தமிழர் பண்பு
59. தமிழர் வாணிகம்
60. பண்டைத்தமிழர் போர்நெறி
61. தமிழர் வரலாறு – தொகுதி–1
62. தமிழர் வரலாறு – தொகுதி–2
63. தமிழர் தோற்றமும் பரவலும்
64. ஆரியர்க்கு முற்பட்ட தமிழ்ப்பண்பாடு
65. தமிழக வரலாறு – சங்க காலம்–அரசர்கள்
66. தமிழக வரலாறு – கோசர்கள்
67. தமிழக வரலாறு – கரிகால் பெருவளத்தான்
68. இந்தியாவில் கற்காலம்
69. குடிமகனின் அடிப்படை உரிமையா? சட்டமன்ற உரிமையா?

*நன்றி:* **முனைவர் மு.இளங்கோவன்**
*புதுச்சேரி.*

# மணமகன் தேவை

பெயர் : **M.ஜனனி**

பிறந்த தேதி : 02.07.1996, தாம்பரம், சேனடோரியம், செவ்வாய்கிழமை 8.11 P.M.

நட்சத்திரம் : உத்திராடம்

ராசி, லக்னம் : மகரம், மகரம்

நிறம், உயரம் : சிகப்பு, 5'3''

சொந்த ஊர் : திருவான்மியூர், சென்னை



படிப்பு : B.Tech., (IT),

தொழில் : இல்லை

தந்தை பெயர் : K.M.மனோகரன், M.A., Under Secretary to Govt. (Rtd), Secretariat, Chennai

தாயார் பெயர் : M.பாரிஜாதம், B.Com.,

உடன் பிறந்தோர் : இல்லை

முகவரி : திருவான்மியூர், சென்னை

எதிர்பார்ப்பு : B.E., B.Tech., M.B.B.S., BDS., படித்து பணியில் உள்ள வரன் தேவை. சுத்த ஜாதகம். பொருத்தம் உள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும்.

செல் : **94446 05461** (வாட்ஸ் அப்), **89038 75461**

மின்னஞ்சல் : amburmanoharan@gmail.com

| | | | |
|---|---|---|---|
| சனி கே | | செ சு | சூ பு |
| | இராசி | | |
| ல / சந் | | | |
| வி | | | ரா |

| | | | |
|---|---|---|---|
| சூ சந் | ல | | ரா சு |
| | நவாம்சம் | | செ |
| | | | |
| பு கே | சனி | | வி |

சூரிய திசை இருப்பு 0 வருடம் 11 மாதம் 21 நாள்

---

பெயர் : **M. பிரியதர்ஷினி**

பிறந்த தேதி : 08-09-1997 5:58 PM

உயரம் : 172 CM

ராசி : விருச்சிகம்

லக்னம் : கும்பம்

நட்சத்திரம் : அனுஷம்

இனம் : செங்குந்தர்



கல்வித்தகுதி : M.Sc., Maths

பணி : தனியார் துறையில் ஆசிரியை மற்றும் Computer Operator (Chennai)

தந்தை : ப. முத்துவேல்

தாய் : சித்ரா

உடன்பிறந்தோர் : தங்கை B.E., (B.Tech) தம்பி - 1

முகவரி : எசாலம் பெரிய தெரு, விக்கிரவாண்டி தாலுகா, விழுப்புரம்.

அலைபேசி : **97867 24570, 97872 53888** (Whatsapp)

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| ல / கே | இராசி | | |
| கு | | | சூ ரா பு |
| | சந் | செ சு | |

| | | | |
|---|---|---|---|
| | ல | செ பு கே | |
| | நவாம்சம் | | கு |
| | | | சந் |
| | சனி ரா | சூ சு | |

சனி திசை இருப்பு 16 வருடம் 3 மாதம் 20 நாள்

# மணமகன் தேவை

பெயர் : **S.சக்தி பிரியா**
படிப்பு : B.E., M.E., (ECE)
பிறந்த தேதி : 14-10-1996 திங்கள்
12.20 AM (GMT 06.50.00 PM)
நட்சத்திரம் : சுவாதி
ராசி / லக்னம்: துலாம் ராசி / கடகம் லக்னம்
இனம் : செங்குந்த முதலியார்
நிறம் / உயரம்: சிவப்பு / 154 செ.மீ
சொந்த ஊர் : மானாம்பதி, செங்கல்பட்டு மாவட்டம்
(பூர்வீக வீடு மற்றும் காலி இடம் உள்ளது)
தந்தை பெயர் : S.செல்வராஜ், கரூரில் தனியார் நிறுவனத்தில் பணிபுரிகிறார்
தாய் பெயர் : S.சசிகலா, குடும்பத் தலைவி
உடன்பிறந்தோர் : இல்லை
முகவரி : 28E/40, பாரதி நகர்,
தாந்தோணி மலை போஸ்ட்,
கரூர் மாவட்டம் - 639005.
கைபேசி : **98947 90470, 96551 94429**
சொத்துவிபரம் : 500 சதுர அடி தார்சு வீடு & தாந்தோணி மலையில் இரண்டு வீட்டு மனைகள் உள்ளது.
எதிர்பார்ப்பு : நிரந்தரப் பணியில் உள்ள நல்ல குணமுடைய மணமகன் தேவை. ஜாதகப் பொருத்தம் உள்ளவர்கள் மட்டும் தொடர்பு கொள்ளவும்.
சுத்த ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| கே | | | மா |
| சனி | இராசி | | ல செ |
| | | | சு |
| கு | | சந் | சூ பு ரா |

| | | | |
|---|---|---|---|
| | ரா | | பு சனி |
| செ | நவாம்சம் | | |
| சந் | | | ல சூ |
| | | கே மா | கு சு |

பெயர் : **R.ஆர்த்தி**
பிறந்த தேதி : 15.05.1999, சனிக்கிழமை 11.39 A.M., வைகாசி மாதம் 1ம் தேதி, சைதாப்பேட்டை, சென்னை.



நிறம், உயரம், எடை :
வெள்ளை, 5'3'', 62 கிலோ
நட்சத்திரம் : கிருத்திகை
ராசி, லக்னம் : மேஷம்,
கடகம்
படிப்பு : B.E., (ECE).,
பணி : Cognizant, Chennai
வருமானம் : 26,000/- மாதம்
தந்தை பெயர் : S.ரமேஷ்,
SS Blue Metals & Finance
தந்தை பூர்வீகம் : திருமழிசை
தாயார் பெயர் : R.கீதா, இல்லத்தரசி
முகவரி : 5/3, Perumal Koil Street (Extension),
West Saidapet, Chennai - 600 015
செல் : **93810 20793, 99625 43237**
பிறப்பு வரிசை : 2வது
உடன் பிறந்தோர் : அக்கா 1 திருமணம் ஆனவர்
சொத்து விபரம் : சொந்த வீடுகள் உள்ளன.
மின்னஞ்சல் : ssbluemetals@gmail.com
எதிர்பார்ப்பு : வரனின் வயது 26 to 27க்குள், உயரம் 5'7" ஆகவும், மாநிறமாகவும் இருக்கலாம். கல்வித் தகுதி M.E., Any Degree, அரசுப்பணி, தனியார் பணி அல்லது சுயதொழில் செய்பவராகவும் இருக்கலாம். வெளிநாடு செல்ல இசைவு உண்டு. திருமணத்திற்கு பின் வேலைக்கு செல்ல விருப்பம் உண்டு.

| | | | |
|---|---|---|---|
| கு | சனி பு சந் | சூ | சு |
| | இராசி | | ல ரா |
| கே | | | |
| | | செ | |

| | | | |
|---|---|---|---|
| வி | | | |
| ல சு ரா | நவாம்சம் | | |
| சூ | | | கே சனி |
| சந் | செ | | பு |

ரவி திசை இருப்பு 5 வருடம் 4 மாதம் 13 நாள்

# மணமகன் தேவை

பெயர் : **T.அர்ச்சனா**
படிப்பு : B.Sc., (CS), MBA., (HR),
பணி : SRKAY (Consulting Group)
வருமானம் : 30,000/-மாதம்



பிறந்த தேதி : தாது வருடம் சித்திரை மாதம் 28 புதன்கிழமை 08.05.1996, 1.32 P.M. சென்னை
நட்சத்திரம் : உத்திராடம் 1ம் பாதம்
ராசி, லக்னம் : தனுசு, சிம்மம்
நிறம், உயரம், எடை : மாநிறம், 154 செ.மீ., 60 கிலோ
இரத்த வகை : A+ பிறப்பு வரிசை : 2வது
தந்தை பெயர் : R.திருநாவுக்கரசு, மருந்தகம்
பூர்வீகம் : ஊத்தங்கரை
தாயார் பெயர் : காஞ்சனா, இல்லத்தரசி
பூர்வீகம் : சென்னை
முகவரி : 60C, கல்லாவி ரோடு, ஊத்தங்கரை (PO), - 635 207, ஊத்தங்கரை (TK), கிருஷ்ணகிரி (DT),
செல் : **81249 94003**
உணவு வழக்கம் : சைவம் / அசைவம்
உடன் பிறந்தோர் : சகோதரர் 1
சொத்து விபரம் : சொந்த வீடு உள்ளது 1 கோடி, வீட்டு மனை, நிலம் உள்ளது.
எதிர்பார்ப்பு : Any Degree, படித்து பணியில் உள்ள (அ) சொந்த தொழில் இருந்தாலும் சரி.

| | | | |
|---|---|---|---|
| கே சனி | சூ செ | பு | சு |
| | **இராசி** | | |
| | | | ல |
| கு சந் | | | ரா |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| பு | **நவாம்சம்** | | செ ரா |
| கே | | | ல |
| சந் | சூ கு | சு | சனி |

சூரிய திசை இருப்பு 4 வருடம் 10 மாதம் 26 நாள்



# வாரியார் அருளமுதம்

★ உலகில் செய்த தர்மம் ஒன்றே என்றென்றும் அழிவில்லாமல் இருக்கும். பொன், பொருள் போன்ற செல்வம் நம் கண் முன்னே காணாமல் போய்விடும்.

★ துன்பம் இல்லாமல் இன்பமாக வாழ விரும்பினால், மனதால் கூட அடுத்தவருக்கு தீங்கு நினைக்கக் கூடாது.

★ வயலில் தூவப்படும் சில விதைகளே, பல ஆயிரம் மடங்கு பயிர்களை திருப்பித் தருகின்றன. அதேபோல, ஒருவர் செய்யும் நன்மையும் தீமையும் அவர்கள் செய்ததற்கு ஏற்ற வகையில், பல மடங்காகப் பெருகி, அவரிடமே திரும்ப வந்துசேரும்.

★ நல்ல உணவுகளை உண்பதால் உடல் வளரும். நல்ல நூல்களைப் படிப்பதால் உணர்வு வளரும். நல்ல உள்ளத்துடன் சதா இறைவனை நினைப்பதனால் உயிர் வளரும். இம்மூன்றும் வாழ்வின் அத்தியாவசியத் தேவைகள்.

★ எப்போதும் இறைவனின் நினைவு வேண்டும். அது முடியவில்லையானால் எழுகின்ற போது, சாப்பிடும் போது மற்றும் படுக்கும் போதாவது நினைக்க வேண்டும்.

# COURSES OFFERED IN HIGHTER SECONDARY

**I - Physics, Chemistry, Maths, Biology**

**II - Physics, Chemistry, Maths, Computer Science**

**III - Commerce, Accountancy, Economics, Business Maths**

**IV - Commerce, Accountancy, Economics, Computer Applications**









# உங்கள் பக்கம்

அன்பும், பண்பும், ஆன்மீகமும், வீரமும், விவேகமும் நிறைந்த செங்குந்த சொந்தங்களுக்கு, வணக்கம்.

*அன்பு என்பது நெல் மாதிரி*
*போட்டால்தான் முளைக்கும்*
*வம்பு என்பது புல்மாதிரி*
*எதுவும் போடாமலே முளைக்கும்.*

கொரோனா காலத்தில் சிலர் சும்மா இருப்பது கஷ்டமாக இருப்பதால் அடுத்தவர்களைப் பற்றி வம்படிப்பதே வேலையாகப் போய்விட்டது. இது அவர்களுக்கே பூமராங் போல திரும்பி வந்து தாக்கும் என்பது தெரியவில்லை.

சூழ்நிலைகள் மாறும்போது சிலரது வார்த்தைகளும் மாறும். சிலரது வாழ்க்கையும் மாறும். வார்த்தையில் கவனமும் வாழ்க்கையில் நம்பிக்கையும் இருப்பின் சிறப்பான வாழ்வு நம் வசமாகும்.

நமக்கு தெரிந்தது மிகவும் குறைவு என்பதை புரிந்து கொள்ள பலரை நாம் கடந்து செல்லவேண்டும்.

சாதிகள் ஒழியவேண்டும் என்று சொல்லிக் கொண்டே நமது நாட்டு அரசியல் அதிலேயே மூழ்கிக் கொண்டிருக்கிறது.

சாதி அரசியல் செய்யாதீர்கள் என்று ஊருக்கு உபதேசம் செய்து கொண்டு, ஒவ்வொரு சாதியும் தங்களுக்கென்று ஒர் அரசியல் கட்சியை வைத்துக்கொண்டு தங்கள் சாதிக்கு தேவையானதை வாங்கிக் கொள்கிறார்கள் – பயன்பெறுகிறார்கள்.

மருத்துவ கல்விக்கான மாணவர் சேர்க்கையில் அனைத்திந்திய ஒதுக்கீடு எனப்படும் மத்தியத் தொகுப்பில் (OBC) பிற பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு 27 சதவீதம் இட ஒதுக்கீடு வழங்கப்படும் என மத்திய அரசு அறிவித்திருக்கிறது.

தமிழக அரசுப் பணி நியமனங்களிலும், கல்வி வாய்ப்புகளிலும் மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பில் வன்னியருக்கு 10.5 விழுக்காடும், சீர்மரபினருக்கு 7 விழுக்காடும், இதர பிரிவினருக்கு 2.5 விழுக்காடும் இட ஒதுக்கீடு வழங்கி தமிழ்நாடு அரசு அரசாணை வெளியிட்டுள்ளது.



நம் இனமக்களுக்கும் இதுபோல் உள் ஒதுக்கீடு தேவை. அப்போதுதான் நாம் மற்றவர்களுடன் கல்வி மற்றும் வேலை வாய்ப்புகளில் முன்னேற முடியும். அதற்கு அரசின் கவனத்தை ஈர்க்க கோரிக்கைகள் வைக்கவேண்டும். தலைமைச் சங்கம் இதற்குத் தேவையான பல ஆலோசனைகளை மேற்கொண்டுள்ளது.

எனவே, நமது மாவட்டத் தலைவர்கள் தங்கள் மாவட்ட உறுப்பினர்களிடம் கலந்தாலோசித்து மேற்கொண்டு எந்த மாதிரியான ஆலோசனைகளை முன்னெடுத்துச் செல்ல வேண்டும் என்பதை உடனடியாக தலைமைக்கு தெரியப்படுத்துங்கள்.

உங்களுடைய முடிவுகளைக் கலந்தாலோசித்து அடுத்த நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். இது மிகவும் அவசரமான நடவடிக்கை ஆகும்.

*வார்த்தைகளால் சொல்லும் பதில்களைவிட*
*வாழ்க்கையால் சொல்லும் பதில்களே*
*வலிமை வாய்ந்தவை!*

மீண்டும் சந்திப்போம்
பிரியமுடன்...

KPK செல்வராஜ்



# வள்ளல் சபாபதி மெட்ரிக் மேல்நிலை பள்ளியில் பெற்றோர் ஆசிரியர்கள் சந்திப்பு கூட்டம்

வள்ளல் சபாபதி மெட்ரிக் மேல்நிலை பள்ளியில் 2021–2022ம் கல்வியாண்டின் முதல் பெற்றோர் ஆசிரியர்கள் சந்திப்பு கூட்டம் 21.07.2021 அன்று பள்ளியின் செயலாளரும், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் பொதுச்செயலாளருமாகிய R.P.குமரகுருபரன் அவர்கள் தலைமையிலும், பொருளாளர் R.காந்தி அவர்கள் முன்னிலையிலும் நடைபெற்றது. நடப்பு ஆண்டில் புதியதாக பள்ளியில் சேர்ந்த மாணவர்களுக்கு வழிகாட்டுதல்கள் மற்றும் இணைய வழி வகுப்புகளுக்கான பயிற்சி விளக்கங்களும், ஆசிரியர்களுக்கான செயல்திட்டங்களும் விவாதிக்கப்பட்டன. முன் ஆண்டுகளில் நிலுவை நிற்கும் பள்ளி கட்டண நிலுவைகளை உடன் செலுத்துமாறு பெற்றோர்களுக்கு அறிவுறுத்தப்பட்டது. கூட்டத்திற்கு வருகை தந்த அனைவரையும் பள்ளி முதல்வர் பாலசுப்பிரமணியன் வரவேற்றோர். பெற்றோர் ஆசிரியர் சங்கத்தின் தலைவி திருமதி சுந்தரி நிகழ்ச்சிகளை ஒருங்கிணைத்தார். அனைத்து வகுப்பு ஆசிரிய–ஆசிரியைகள் பங்கேற்றனர். கூட்டத்திற்கு வருகை தந்த அனைத்து பெற்றோர் – ஆசிரியர்கள் மற்றும் மாணவர்களுக்கு சிறப்பான முறையில் மதிய உணவு வழங்கப்பட்டது.



## பாடல்—20

*உறைகின்றநின் திருக்கோயில் நின் கேள்வர் ஒரு பக்கமோ*
*அறைகின்ற நான்மறையின் அடியோ முடியோ அமுதமும்*
*நிறைகின்ற வெண்திங்களோ கஞ்சமோ என்றன் நெஞ்சகமோ*
*மறைகின்ற வாரிதியோ பூரணாசல மங்கலையே.*

எங்கும் பூரணமாய் நிறைந்து, அசைவற்ற, நிலையாய் இருக்கும் சகல மங்களங்களின் ஆதாரமான நித்திய கல்யாணியான அபிராமியே! நீ எழுந்து அருளும் இடங்கள் எவை? பிரிக்க முடியாதபடி சேர்ந்திருக்கும் உன்னுடைய மேலான ஆலயமான உன் நெருங்கிய உறவினரான உன் கணவரின் ஒப்பற்ற இடப்பாகமோ? உன் புகழ் பாடும் ருக், யஜுர், சாம, அதர்வணமாகிய நான்கு வேதங்களின் மூலமாக உள்ள ப்ரணவமோ? முடிவாக உள்ள உபநிடதங்களோ? அமுதம் பொழியும், பூரணமாக உள்ள வெண்மையான சந்திரன் தானோ? அல்லது தாமரை மலரிலா, அடியேனுடைய இருதயத்திலா, ஊழிக் காலத்தில் சகலத்தையும் மறைக்கின்ற சமுத்திரத்திலா?

**பலன்: மனக் கவலை நீங்கும்.**

கேள்வர் : கணவர், நெருங்கிய உறவினர்    அறைகின்ற : சொல்கின்ற
நான்மறை : நான்கு வேதம்    கஞ்சம் : தாமரை    வாரிதி : பாற்கடல்

## பாடல்—21



*மங்கலை, செங்கலசம் முலையாள், மலையாள் வருணச்*
*சங்கலைச் செங்கை சகலகலாமயில், தாவு கங்கை*
*பொங்கும் அலைதங்கும் புரிசடையோன் புடையாள் உடையாள்*
*பிங்கலை, நீலி, செய்யாள், வெளியாள், பசும் பெண்கொடியே.*

அபிராமியே! நீ தான் சர்வ மங்களங்களின் வடிவானவள், நித்ய சுமங்கலி, செப்புக் கலசம் போன்ற ஸ்தனங்களை உடையவள், மலையரசனான இமவானின் மகள், வெண்மையான கடல் சங்கிலியால் ஆன வளையல்கள் அலை போல அசைகின்ற சிவந்த கைகளை உடையவள், எல்லா கலைகளையும் தன்னுள் அடக்கி கலைகளுக்கு எல்லாம் அதிபதியான சகலகலா மயில், பாய்ந்து பொங்கி எழும் கங்கை அலை தங்குகின்ற பின்னிய சடையுடைய சிவபெருமானது இடது பக்கம் உரிமையுடன் அமர்ந்திருப்பவளே! பொன்னிறம் கொண்ட பிங்கலை, நீல நிறம் கொண்ட காளி, செந்நிறம் கொண்ட லலிதாம்பிகை, வெந்நிறம் அமைந்த வித்யா தேவி, பச்சை நிறம் கொண்ட பொற்கொடி அனைத்தும் அபிராமியே பஞ்ச சக்தியானவள்.

**பலன்: தீர்க்க சுமங்கலியாய் இருக்கும் வரம்.**

மங்கலம் : நித்ய சுமங்கலி, மங்கலங்களுக்கு இருப்பிடமானவள், சகல கலைகளின் வடிவானவள்,
பிங்கலை : பொன்னிறமானவள்

- தொடரும்

# கைத்தறியை போற்றுவது மட்டுமல்ல வாங்குவதும் நம் கடமை

குரங்கிலிருந்து மனிதன் வந்தான் என்பதை உணர்த்தும் வகையில் நாகரிக மனிதன் என்பதை தன் உடலை மறைக்கும் விதமாக ஆடைகள் அணிய ஆரம்பித்தான். ஒவ்வொரு பரிமாணங்களுக்கு ஏற்ப மாற்றங்கள் செய்ய தொடங்கினான் மனிதன். நம் மக்கள் மட்டுமில்லாமல் அயல்நாட்டு மக்களும் பார்த்து பொறாமைப்படும் அளவிற்கு நம்முடைய ஆடை நாகரிகம் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது.

தேசிய அளவு என்பதை கடந்து தமிழ்நாட்டின் ஆடை நெசவிற்கு என்று தனி சிறப்பு உண்டு. அதை குடும்ப தொழிலாக செய்பவர்கள் பலர் என்றே கூற வேண்டும். அதிக உடல் உழைப்பை செலவழிக்கும் தொழிலாக கைத்தறி திகழ்கிறது. ஆனால் முந்தைய காலம் போல் இப்போது வருமானம் இல்லை என்று பலரும் வேறு தொழிலிற்கு மாறுகின்றனர். கலாச்சாரத்தையும், நாகரிகத்தையும் முன் நிறுத்த வேண்டும் என்ற ஒரே நோக்கோடு இன்றும் இந்த தொழிலை செய்துதான் வருகின்றனர்.

உழவனின் கையில் ஏர்; நெய்பவனின் கையில் தறி என்கிறது பழமொழி. கைத்தறிக்கு புகழ்போனது தான் நம் பாரதம். காசுக்காக மட்டும் உழைப்பவர்கள் அல்ல நெசவாளிகள். நமது பாரம்பரியத்தை அடுத்த தலைமுறைக்கு எடுத்து செல்பவனே உண்மையான தொழிலாளி. விவசாயம் எந்தளவுக்கு பழமையானதோ அந்தளவு கைத்தறி நெசவும் மிகப்பழமையான நுட்பங்கள் வாய்ந்தது.

உழுத கால்களும், நெய்த கைகளும் ஓய்வறியாதவை என்பது ஆன்றோர் வாக்கு. அக்காலத்தில் பிறக்கும் குழந்தைகளுக்கு கைகளால் நெசவு செய்த துணியை தான் தொட்டில் கட்ட பயன்படுத்துவார்கள். அதில் சுத்தமான காற்றும், ஆரோக்கியமும் கிடைக்கும். ஆனால் தொழிற்நுட்பங்கள் வளர அந்த பழக்கம் இல்லாமலே போய்விட்டது.

நெசவாளர்களை கவுரவிக்கும் விதமாக தேசிய கைத்தறி தினம் 2015 ஆண்டு முதல் அனுசரிக்கப்பட்டு வருகிறது இந்திய சுதந்திரப் போராட்டத்தின் போது அந்நியத் துணிகளை புறக்கணிக்கும் விதமாக ‘சுதேசி இயக்கம்’ 1907ஆம் ஆண்டு ஆகஸ்ட் 7 ஆம் தேதி தொடங்கப்பட்டது. அதன் நினைவாக கைத்தறி தொழிலின் முக்கியத்துவம் குறித்து பொதுமக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்த இந்த கைத்தறி தினம் கொண்டாடப்படுகிறது.

இந்தியாவில் கைத்தறித் துறை காலப்போக்கில் மிக முக்கியமான குடிசை வர்த்தகமாக உருவெடுத்துள்ளது. கைத்தறி நெசவாளர்கள் பருத்தி, பட்டு மற்றும் கம்பளி போன்ற தூய இழைகளைப் பயன்படுத்தி பொருட்களை உருவாக்கி வருகின்றனர். தேசிய கைத்தறி தினத்தை நடத்துவதன் முதன்மை குறிக்கோள், இந்தியாவின் சமூக பொருளாதார முன்னேற்றத்திற்கு கைத்தறி பங்களிப்பை கவனிப்பதாகும்.

ஒவ்வொரு தேசிய கைத்தறி தினத்திலும், நெசவாளர்களுக்கான வேலை மாற்றுகள் குறித்த விவரங்களைப் பகிர்ந்து கொள்வதற்காக பட்டறைகள் நடத்தப்படுகின்றன. கண்காட்சிகள், பட்டறைகள் மற்றும் குழு விவாதங்கள் கூடுதலாக நடத்தப்படுகின்றன.

இந்தியாவின் பாரம்பரியம், பண்பாடு உள்ளிட்டவற்றின் அங்கமாக கைத்தறி

பொருட்களை பயன்படுத்துவதனால் நெசவாளர்களின் வாழ்வாதாரம் உயர வாய்ப்புள்ளது. நம் நாட்டில் கிட்டத்தட்ட 43 லட்சத்துக்கும் அதிகமானோர் கைத்தறி சார்ந்த தொழில்களில் ஈடுபட்டுள்ளதாக கணக்கெடுப்பில் தெரியவந்துள்ளது. மேலும், நமது நாட்டின் கலாச்சார பண்பாட்டை தெரிவிக்கும் இந்த தொழிலை மேம்படுத்த மத்திய, மாநில அரசுகள் இணைந்து நாடு முழுவதும் 'தேசிய கைத்தறி தினம்' கொண்டாடப்படுகிறது.

நமது கைத்தறி துறை பன்முகத் தன்மை கொண்டது. சுற்றுச் சூழலுக்கு உதவக்கூடியது. அது, நாட்டின் கணக்கில் அடங்காத நெசவாளர்களுக்கு வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தருவதும் ஆகும்.

# வருந்துகிறோம்



திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் செங்குந்த மகாஜன சங்கத்தின் துணைத் தலைவர் முனைவர் **திரு.P.சண்முகசுந்தரம்** அவர்கள் 04.07.2021 அன்று காலமானார்.



திருப்பூர் மாவட்டம் கருவம்பாளையம் தெய்வத்திரு. **K.பழனியப்ப செங்குந்தர்** மகனும், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவர் **திரு. K.P.K.செல்வராஜ்** அவர்களின் சித்தப்பாவுமாகிய **திரு.K.P.கந்தசாமி செங்குந்தர்** அவர்கள் 13.07.2021 அன்று காலமானார்.



கடலூர் மாவட்டம், காராமணிக்குப்பம், செங்குந்த மகாஜன சங்கத்தின் உறுப்பினர் தெய்வத்திரு **வை. உருத்திராபதி செங்குந்தர்** அவர்களின் துணைவியார் **திருமதி. கிருஷ்ணவேணி உருத்திராபதி** அவர்கள் 24-05-2021 அன்று காலமானார்.



கடலூர் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கத்தின் முன்னாள் தலைவரும், தற்போதைய கௌரவத் தலைவருமான **திரு. வை.ஆனந்தன் செங்குந்தர்** அவர்கள் 10-07-2021 அன்று இயற்கை எய்தினார்.

**இவர்களது மறைவுக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் சார்பில் ஆழ்ந்த வருத்தத்தையும் இரங்கலையும் தெரிவித்துக் கொள்கிறோம்.**



# முதுமையிலும் மகிழ்ச்சிக்கு வழிகாட்டும் கால்கள்

அதிசயம் நிகழ்த்தும் கால்களைப் பற்றிய மருத்துவத் தகவல்கள்

இளமைக் காலத்தைக் கடந்து வயோதிகத்தை நெருங்கும் தருணத்தில் முடி நரைத்து விட்டது என்பதைப் பற்றியோ, தலையில் முடி கொட்டி வழுக்கை விழுந்துவிட்டது என்றோ அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை. ஏனென்றால், அதனாலெல்லாம் வாழ்க்கை நிலையில் பெரிய பாதிப்பு இல்லை. வலுவான கால்கள் இருந்தால் போதும், அழகாக முதுமையை ஆரோக்கியமாக எதிர்கொள்ளலாம் என்று அமெரிக்க மருத்துவ இதழ் ஒன்றில் வெளியான கட்டுரையில் குறிப்பிடுகிறது.

- கால்கள் அதிலும் குறிப்பாக பாதங்களே முழு உடல் எடையையும் சுமக்கின்றன.
- உங்கள் கால்களை இரு வாரங்கள் அசைக்காமல் இருந்தீர்களென்றால், 10 வருடங்களுக்கான வலுவை கால்கள் இழந்துவிடும் என்கிறார்கள்.
- கால்கள் தன் வலுவை இழந்துவிட்டால் நீங்கள் முயன்று தினமும் உடற்பயிற்சி செய்தாலும் முந்தைய நிலையைப் பெற பல நாட்களாகும்.
- நம் உடலில் 50 விழுக்காடு எலும்பும், தசையும் இரண்டு கால்களில்தான் உள்ளன.
- நமது உடலில் நரம்பின் செயல்பாடு, ரத்த ஓட்டம் மற்றும் ரத்தக் குழாய்களின் 50 விழுக்காடு வேலைகள் கால்களில்தான் நடைபெறுகிறது.
- நம் 70% உடல் உழைப்புக்கு இரண்டு பாதங்களே காரணமாக இருக்கின்றன.
- பாதங்களே நம் உடலின் அனைத்து அசைவுக்கும் மையமாகச் செயல்படுகிறது.
- வலிமையான கால் தசைகளே வலிமையான இதயத்துக்கு அடையாளமாகும்.
- வயது ஏற ஏற கால் எலும்புகளில் உள்ள கால்சியம் குறைவதால், எலும்பு முறிவுகள் எளிதில் ஏற்படுகின்றன.
- தொடை எலும்புமுறிவு ஏற்பட்ட முதியவர்களில் 15 விழுக்காட்டினர் ஒரு வருடத்திற்குள்ளேயே இறந்து விடுகிறார்கள்.
- உடற்பயிற்சியை எந்த வயதிலும் செய்யலாம். அன்றாட உடற்பயிற்சியும், நடைப்பயிற்சியும் மனதிற்கும் கால்களுக்கும் வலுவூட்டும்.
- உடற்பயிற்சியை தொடர்ந்து செய்வதால் கால்கள் வலுவடைகின்றன. இதன் மூலம் முதுமையை தள்ளிப்போட முடியும்.



# தங்கம் ஏன் துருப்பிடிக்காது?

தங்கமும் சாதாரண உலோகம் தானே தங்கத்திற்கு ஏன் இவ்வளவு விலை? என மனதில் தோன்றுபவர்களுக்கு, தங்கத்தின் சில தனிச்சிறப்புகளை பற்றி தெரிந்து கொள்ள வேண்டும்.

தங்கம் துருபிடிக்காது, தங்கத்தை அணியும்போது உடலில் எந்த பக்க விளைவும் வராது. பார்க்க பளபளப்பாக அழகாக இருக்கும்.

## துருப்பிடித்தல் என்றால் என்ன?

உலோகமானது சுற்றுச்சூழலில் உள்ள ஈரப்பத்துடன் (அதாவது ஆக்ஸிசன் மற்ற வாயுக்கள்) வினைபுரிந்து உலோக கலவையாகும் மாறும். இந்த நிகழ்வே துருப்பிடித்தல் எனப்படும்.

உலோகங்கள் : Fe, Mg, Mn

உலோக கலவை: Fe2O3, MgCO3, MnO2

உதாரணமாக, இரும்பு (Fe, உலோகம்) துருப்பிடித்தல் மூலம் இரும்பு ஆக்சைடு (Fe2O3, உலோக கலவை) ஆக மாறுவது.

இந்த நிகழ்வு நடக்க காரணம் என்ன? மேலே உள்ள நிகழ்வை வேறு ஒரு மாதிரியும் சொல்லலாம்.

அதாவது உலோகங்கள் பூமியில் அதன் இயல்பு நிலையில் (நிலையான நிலை) உலோக கலவையாக கிடைக்கின்றன. இந்த கலவையிலிருந்து பின்னர் உலோகங்கள் (நிலையற்ற நிலை) பிரித்தெடுக்கப்படுகிறது.

இந்த உலோகங்கள் ஈரப்பதத்துடன் வினை புரிந்து அதன் இயல்பு நிலைக்கு (உலோக கலவை) செல்வதே துருப்பிடித்தல் ஆகும்.

நாம் பூமியிலிருந்து உலோகத்தை பிரித்தெடுக்கிறோம் அதனால் உலோகம் பழைய நிலைக்கு செல்ல துருப்பிடிக்கிறது என எளிதாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

உதாரணமாக இந்த உலோக கலவை என்பது ஆக்ஸைடு, சல்பைடு, சிலிகேட்ஸ் சேர்ந்த உலோகங்கள் ஆகும்.

உதாரணமாக அயன் (Fe) அதன் கலவை அயன் ஆக்ஸைடு (Fe2O3) லிருந்து பிரித்தெடுக்கப்படும். மெக்னீசியம் (Mg) அதன் கலவை மெக்னீசியம் கார்பனேட் (MgCO3) லிருந்து பிரித்தெடுக்கப்படும் ஆனால் தங்கம் (Au) மட்டும் பெரும்பாலும் அதன் இயல்பு நிலையில் கிடைக்கிறது. தங்கம் உலோகக் கலவை அல்ல. சில சமயங்களில் டெல்லுரைட் கலவைகயாக கிடைக்கும்.

இதனை பிரித்து சுத்தப்படுத்தினால் அதற்கு இயல்பு நிலையில் தான் இருக்கும். இதனால் தங்கம் (Au) ஈரப்பதத்துடன் வினை புரிவதில்லை.

தங்கம் அதன் இயல்பு நிலையில் உலோகமாகவே கிடைப்பதால் அது துருபிடிப்பதில்லை.



# தெய்வத்திரு. கே.எம்.கோவிந்தராசனார் அவர்கள்

நிறுவனர் : கே.எம்.ஜி. கல்வி நிறுவனங்கள்
குடியேற்றம் நகராட்சி முன்னாள் சேர்மன் (1964-1969)
1993-ஆம் ஆண்டு குடியேற்றம் நகரில் 2 நாட்கள் நடைபெற்ற
அகில உலக செங்குந்தர் மகாஜன சங்கத்தின்
மாபெரும் மாநாட்டின் வரவேற்புக்குழு தலைவர்

## திருவள்ளுவர் தொடக்கப்பள்ளி
## திருவள்ளுவர் மேனிலைப் பள்ளி
## கே.எம்.ஜி. கல்வியியல் கல்லூரி
## கே.எம்.ஜி. கலை & அறிவியல் கல்லூரி

திருவள்ளுவர் பல்கலைக்கழகத்துடன் நிரந்தர இணைவு பெற்றது.
பல்கலைக்கழக மானியக்குழுவால் 2(f) மற்றும் 12(B) அங்கீகாரம் பெற்றது.
தேசிய தர மதிப்பீட்டுக் குழுவால் (NAAC) B+ தர மதிப்பீடு பெற்றது.

### இளநிலை (UG)

| | |
|---|---|
| **B.A** | - ஆங்கிலம் |
| **B.B.A** | - வணிக ஆள்முறையியல் |
| **B.Com(General)** | - வணிகவியல் |
| **B.Com(CA)** | - கணினி பயன்பாட்டு வணிகவியல் |
| **B.C.A** | - கணினி பயன்பாட்டியல் |
| **B.Sc** | - கணினி அறிவியல் |
| **B.Sc** | - உயிர்வேதியியல் |
| **B.Sc** | - நுண்ணுயிரியல் |
| **B.Sc** | - வேதியியல் |
| **B.Sc** | - கணிதம் |

### முதுநிலை (PG)

| | |
|---|---|
| **M.A** | - ஆங்கிலம் |
| **M.Com(General)** | - வணிகவியல் |
| **M.Com(CA)** | - கணினி பயன்பாட்டு வணிகவியல் |
| **M.Sc** | - உயிர்வேதியியல் |
| **M.Sc** | - தகவல் தொழில்நுட்பவியல் |
| **M.Sc** | - கணிதம் |
| **M.Sc** | - வேதியியல் |
| **M.Sc** | - பயன்பாட்டு நுண்ணுயிரியல் |
| **M.B.A** | - |

### ஆய்வியல் நிறைஞர் (M.Phil)

| | |
|---|---|
| **M.Phil** | - வணிகவியல் |
| **M.Phil** | - உயிர்வேதியியல் |
| **M.Phil** | - கணினி அறிவியல் |
| **M.Phil** | - கணிதம் |
| **M.Phil** | - வேதியியல் |

### முனைவர் பட்டப்படிப்பு (Ph.D)

| | |
|---|---|
| **Ph.D** | - வணிகவியல் |
| **Ph.D** | - உயிர்வேதியியல் |
| **Ph.D** | - நுண்ணுயிரியல் |
| **Ph.D** | - வேதியியல் |




## கே.எம்.ஜி கல்வி நிறுவனங்களின் நிர்வாகக் குழு



K.M.G.பாலசுப்பிரமணியன்



K.M.G.சுந்தரவதனம் B.A.,B.G.L.,



K.M.G.இராஜேந்திரன் B.Sc.,M.L.,
வழக்கறிஞர்



K.M.G.முத்துக்குமார் B.Com.,




ஒரு சிறுவன் எதற்கெடுத்தாலும் மிகவும் கோபப்படுபவனாக இருந்தான். அவன் கோபத்தில் பேசும் வார்த்தைகள் மற்றும் செயல்கள் அவனது வீட்டார் மற்றும் சுற்றத்தாரைப் பெரிதும் காயப்படுத்தின.

பையனின் நிலையை மாற்ற விரும்பிய அவனது தந்தை, அவனிடம் ஒரு சுத்தியல் மற்றும் பை நிறைய ஆணிகளை தந்து, "உனக்கு எப்பொழுதெல்லாம் கோபம் வருகிறதோ அச்சமயம் வீட்டின் பின்புறத்தில் இருக்கும் மரவேலியில் இந்த ஆணிகளை அடித்து விடு." என்று கூறினார்.

பையனும் தந்தை கூறியவாறே செய்து வந்தான். பையிலுள்ள ஆணிகள் விரைவில் தீர்ந்து போயின.

தந்தை அடுத்த ஆணிகள் நிறைந்த பையைப் பையனிடம் கொடுத்தார். இவ்வாறு தொடர்ந்து செய்து வருகையில் தனது கோபம் குறைந்து, உணர்வுகள் கட்டுப்பாட்டிற்குள் வருவதை பையன் உணர்ந்தான்.

பின்னர் அதை அவனது தந்தையிடம் தெரிவித்தப் பொழுது, அவன் தந்தை, "இப்பொழுது நீ மரவேலியில் அடித்த ஆணிகளை எடுத்து விடு." என்று கூறினார்.

# கோபம் ஒரு சாபம்



தந்தை கூறியவாறு அடித்த அத்தனை ஆணிகளையும் எடுக்கையிலும் கூட, பையனுக்குக் கோபம் ஏற்படவில்லை; இதையும் கவனித்த தந்தை, தனது பையனை அழைத்து, "இப்பொழுது உன் கோபம் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிட்டது. ஆனால், நீ ஒரு விஷயத்தை கவனித்தாயா?"என்று கூறி, வண்ணம் தீட்டிய மரவேலியைக் காட்டி, அதில் நீ அடித்த ஆணிகளை நீக்கிய பின்பு ஏற்பட்டுள்ள துளைகளைக் கவனித்தாயா? என்னதான் வண்ணம் தீட்டி இருப்பினும் அத்துளைகள், மரவேலியின் அழகை குலைக்கின்றன.

இதுபோல்தான் முதலில் நீ கோபப்பட்டு, தற்பொழுது அந்தக் குணத்தை விட்டு மீண்டு வந்திருந்தாலும் நீ பேசிய கோப வார்த்தைகளால் மற்றவர் மனதில் ஏற்பட்ட காயம் இத்துளைகள் போலவே ஆறாமல் இருக்கும். ஆகையால் இது போன்ற ஒரு தவறை இனி என்றும் உன் வாழ்நாளில் செய்யலாகாது." என்று அறிவுரை கூறினார்.

**நீதி:** கோபம் என்பது ஒரு கத்தியைப் போன்றது; கத்தியைக் கொண்டு ஒரு மனிதனைக் குத்தினால், அதனால் ஏற்பட்ட காயம் ஆறிய பின்னும் அதனால் ஏற்பட்ட தழும்பு அந்நபரில் நிலைத்திருக்கும். அது போன்றே கோபத்தால் பேசிய வார்த்தைகளும் மனதில் ஆறா தழும்பை ஏற்படுத்திவிடும்.

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் - ஆறாதே
நாவினாற் சுட்ட வடு. - குறள் 129

04-04-2021 அன்று
எண்பத்து ஐந்தாம் ஆண்டு

# பிறந்த நாள் முத்து விழா!



## திரு. பு.ப.பாலகிருஷ்ணன் - திருமதி. அனுசுயா பாலகிருஷ்ணன்

**Head Draughting Officer, Highways and Rural Works Department**

திருவண்ணாமலை மாவட்டம், வெம்பாக்கம் தாலுக்கா அசனமாபேட்டை கிராமம், பிள்ளையார் கோயில் தெரு, **தெய்வத்திரு. பு.ப.பரசுராமன் செங்குந்தர் - திருமதி. ஞானப்பூங்கோதை அம்மாள்** ஆகியோரின் புதல்வரும் நெடுஞ்சாலை மற்றும் ஊரகப்பணித்துறையில் 37 ஆண்டுகள் பணிபுரிந்து தலைமை வரை தொழில் அலுவலர் (H.D.O.) பதவியில் ஓய்வு பெற்றவருமான **பு.ப.பாலகிருஷ்ணன்** (உறுப்பினர் எண். 1829) அவர்களின் **எண்பத்து ஐந்தாம் ஆண்டு பிறந்த நாள் ஆயிரம் பிறைகண்ட சதாபிஷேக பெருவிழா** கண்டவர் அவர்களுக்கு 04-04-2021 அன்று சென்னை, சைதாபேட்டையில் உள்ள அருள்மிகு காரணீஸ்வரர் உடனுறை அருள்மிகு சொர்ணாம்பிகை திருக்கோயிலில் சிறப்புற நடைபெற்றது.

தங்கள் அன்புள்ள..

**மகன்கள் - மருமகள்கள்:**

திரு. Dr. **பா.நடராஜன்,** B.Sc.,MBBS.,DMRD., — திருமதி. Dr. **நிர்மலா,** MBBS.,DCH., M.D.D.M(Gastro).,

திரு. Er. **பா.சிவகுமார்,** B.E.,A.M.I.E., — திருமதி. **கலைச்செல்வி,** B.E.,M.E.,

திரு. Er. **பா.சிவசங்கர்,** B.E.,M.E., — திருமதி. Dr. **சாந்தி,** M.B.B.S.,DGO.,M.D.,(O&G)

திரு. Er. **மு.சி.சரவணன்,** B.E.,M.E.,(U.S.A.) — திருமதி. Er. **பா.ஆனந்தி,** B.E.,(U.S.A.)

திரு. Er. **பா.சதீஷ்குமார்,** B.E.,MBA.,(U.S.A.) — திருமதி. Er. **சியாமளா,** B.Sc.,M.C.A.,(U.S.A.)

திரு. Dr. **சொ.சாலைசுதன்பிரபு,** M.B.B.S., DIP.N.B.(Paed) M.D.,

**பேரக்குழந்தைகள்:**

**வந்தனா நடராஜன்** M.B.B.S.,DCH.,M.D., **விஷால் நடராஜன்,** M.B.B.S., **சஞ்சீதா சிவகுமார்** M.B.B.S.,
**விஜய்ஸ்ரீராம் சிவகுமார்** **பிரணவ் சிவசங்கர்** M.B.B.S., **அஷ்வின் சதீஷ்குமார்** (U.S.A.)
**ஸ்ரீ காந் சதீஷ்குமார்** (U.S.A.) **அசோக் சரவணன்** (U.S.A.) **சந்தியா சரவணன்** (U.S.A.)

கொள்ளுப்பேரன்: **வியன்அழகன்**

**முத்து விழா தம்பதியர் இனிது நீடூழி வாழ வாழ்த்துகிறோம்!**

P.Balakrishanan, 98/C, Old No. 45/C, Kailash Flot,
Sadayappa Mudali Street, Saidapet, Chennai - 600015.
Cell: 96292 45455, 98401 80283 Resi.: 044 - 23812530

# கல்வெட்டுக்களில் கைக்கோளப்பெரும்படை

## 2. பராந்தகத் தெரிஞ்ச கைக்கோளப்படை (கி.பி.907–953)

பிற்காலச் சோழர் வரலாற்றில் முதற் பராந்தகச் சோழனுக்குச் சிறப்பிடம் உண்டு. இவன் முதல் ஆதித்தசோழனின் புதல்வன். இவன் தமிழகத்தை வென்றதுடன் சிங்களத்தையும் வென்றான். எனவே இவனுக்கு சிங்களாந்தகன் என்ற பெயரும் உண்டு. தில்லை நடராசர் கோயிலைப் பொன்வேய்ந்து போற்றியவன், இவன் காலத்திலும் கைக்கோளர் மரபிலிருந்து ஆற்றலும் அறிவுத்திறமும் போர்த்திறமும் மிக்க வீரர்கள் பொறுக்கி எடுக்கப் பெற்று நம்பிக்கைக்குரிய படையாகப் பணிகொள்ளப் பெற்றனர். இப்படையைச் சேர்ந்தவர்கள் ஆற்றிய தெய்வப்பணிகள் கல்வெட்டுகளில் பொறிக்கப் பெற்றுள்ளன.

முதற்பராந்தகனுக்கு வீரசோழன், சமரகேசரி, விக்கிரம சிங்கன், சிங்களாந்தகன், தானதுங்கன் முதலிய பட்டப்பெயர்கள் வழங்கப்பெற்றன. எனவே, அவனால் தெரிந்தெடுக்கப்பெற்ற கைக்கோளப்படை மறவர்களும் அப்பட்டப் பெயர்களாலேயே சுட்டப்பெற்றனர். முதற் பராந்தகன் காலம் முதலாக சோழ வேந்தர்க்கு உறுதுணையாக விளங்கிய பழுவேட்டரையர்க்குரிய பழுவூரில் (திருச்சி மாவட்டம்) வாழும் செங்குந்தர்கள் இன்றும் கூட இந்தியத் தேசியப்படைகளிலும் காவல் படைகளிலும் மட்டுமே பணிபுரிந்து வருகின்றனர் என்பது சுட்டுதற்குரியது. இவர்களின் வீரத்திறனை ஈட்டி எழுபது என்னும் பிரபந்தம் போற்றியுள்ளது.

முதற்பராந்தகன் காலத்திற்குப்பின் அவன் இரண்டாம் புதல்வன் ஆகிய கண்டராதித்த சோழனின் காலத்தைச் சேர்ந்தவை என்று கருதப்பெறும் மூன்று கல்வெட்டுக்கள் வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளர், சமரகேசரி தெரிஞ்ச கைக்கோளர், விக்கிரமசிங்க தெரிஞ்ச கைக்கோளர் என்ற வீரப்படையினரைக் குறிப்பிடுகின்றன (S.I.I. Vol. XIII No. 45, 47 & 48), இவர்கள் கண்டராதித்த சோழர் காலம் முதலாகச் சோழப்படையில் பெரும்பணி ஆற்றியவர்கள் என்பது எண்ணத்தககது.

காட்டுமன்னார் கோயில் என்னும் ஊரினை அடுத்து விளங்கும் உடையார் குடியில் விளங்கும் அனந்தேசுவரர் கோயில் கல்வெட்டு பராந்தகத் தெரிஞ்ச கைக்கோளப் படையினரைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இப்படையைச் சேர்ந்த 'ஆச்சன் பலதேவன் என்னும் வீரனுக்காக இப்படையினர் அனைவருமாகச் சேர்ந்து இக்கோயிலில் நொந்தா விளக்கு எரிப்பதற்கு 12/2 கழஞ்சு பொன் வழங்கிய செய்தியை இக்கல்வெட்டுச் சுட்டுகிறது (S.I.I.Vol.XIX. No. 17). ஒருவேளை இந்த வீரன் போர்க்களத்தில் வீரமரணம்

பேராசிரியர் முனைவர் சோ.ந.கந்தசாமி

அடைந்திருக்கலாம். அவன் நினைவாக அப்படையினர் நொந்தா விளக்கு எரிப்பதற்குப் பொன் தானம் செய்துள்ளனர் என்று கொள்ளலாம்.

கும்பகோணம் நாகேசுவரர் கோயில் தென் புறச் சுவரிலுள்ள கல்வெட்டு வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளப் படையினருள் ஒருவனாகிய கடிகாவன் கள்ளான் என்னும் வீரன் அக்கோயிலுக்கு நொந்தா விளக்கு எரிக்கும் பொருட்டு 90 ஆடுகள் கொடுத்த செய்தியைக் குறிப்பிடுகிறது (S.1.1. Vol. XIX, No. 8).

உடையார்குடி அனந்தேசுவரர் ஆலயத்தில் தென்புறச் சுவரில் காணப்பெறும் கல்வெட்டில் தான தொங்கத்தெரிஞ்ச கைக்கோளப்படையைச் சேர்ந்த அரையன் கேயவிடங்கன் என்னும் வீரன் பத்துப் பொற்காசுகள் வழங்கிய செய்தி குறிப்பிடப்பெற்றுள்ளது. இந்த நிதியைக் கொண்டு இக் கற்கோயிலின் தென் பக்கத்து ஆடி அருளுகின்ற கூத்தப் பெருமானுக்குப் பரிவட்டம் சாத்தி – அருளும்படி செய்திருந்தான். மேலும் இவன் கூத்தர்க்கும் கணபதியாருக்கும் பிச்சாடன மூர்த்திக்கும் அதே கோயிலில் தனித்தனி சன்னிதிகள் அமைத்துத் தன் சிவபக்தியைப் புலப்படுத்தினான் என்ற செய்தியும் இக்கல்வெட்டில் சுட்டப்படுகின்றது.

கருவூர் வட்டத்தைச் சேர்ந்த சோமூர் என்னும் இடத்தில் கட்டப்பெற்ற சோமேசுவர உடையார் கோயில் கல்வெட்டும் தானதொங்கத்தெரிஞ்ச கைக்கோளரைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இப்படையைச் சேர்ந்த பராந்தகன் புருஷோத்தமன் என்னும் வீரன் திருநோம்பலூர் மகாதேவர் கோயிலுக்கு மூன்று சந்தி வழிபாட்டிற்கும் விளக்கெரிப்பதற்காகவும் 212 கழஞ்சு பொன் தானம் வழங்கிய செய்தி இக்கல்வெட்டில் சுட்டப்படுகின்றது (S.I.I. Vol. XIX No. 166).

உடையார்குடி கோயிற் கல்வெட்டொன்றில் சிங்களாந்தக தெரிஞ்ச கைக்கோளப் படையைச் சேர்ந்த பலதேவன் பனையன் என்னும் பெருவீரன் நாள்தோறும் ஒரு நொந்தா விளக்கு எரிப்பதற்காகக் கொடுத்த பொன் 1272 கழஞ்சுக்கும் 90 ஆடுகள் வாங்கி அவ்வூரினர் நாள்தோறும் அக்கோயிலுக்கு உழக்கு நெய் வழங்கியமை குறிக்கப்பெற்றுள்ளது (S.I.I. Vol. XIX. No. 21).

சிங்கள மக்களுக்கு அந்தகனைப் (யமனைப்) போன்றவன் என்ற பொருளில் வழங்கும் சிங்களாந்தகன் என்ற சிறப்புப்பெயர் முதலாம் இராசராசனுக்கும் உரியது (காண்க: தி.வை. சதாசிவப் பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம், பக்.122) எனவே இங்குச் சுட்டப்பெறும் கைக்கோளப்படை இம்மன்னனுக்குப் பேருதவி புரிந்தது என்று கருதலாம்.

– தொடரும்



திருமண பாக்கியம் கொடுக்கும்

# ஆடிப்பூர விரதம்

தேவிக்குரிய திருநாள்களில் ஆடி மாதம் பூர நட்சத்திரத்தில் கொண்டாடப்படும் "ஆடிப் பூரம் திருநாள்' மிகவும் சிறப்பானது. ஆடிப் பூரத்தன்று வைணவத் திருக்கோயில்களில் ஆண்டாளுக்கு சிறப்பு பூஜை நடைபெறும். திருமணமாகாத பெண்கள் இந்நன்னாளில் ஆண்டாளை விரதம் இருந்து வணங்கினால் அவர்களுக்கு விரைவில் திருமணம் கைகூடும்.

பெண்களுக்கு வளையல் காப்பு நடத்துவதுபோல, நம்மைப் படைத்த அன்னைக்கு வளைகாப்பு நடத்தி மகிழ்ந்திடும் நாளே ஆடிப்பூரம். அம்பிகைக்கு வளையல்களால் அலங்காரம் செய்து வழிபட்டு அந்த வளையல்கள் பெண்களுக்குப் பிரசாதமாக அளிக்கப்படுகிறது.

ஆடிப்பூரத்தையொட்டி அம்மன் ஆலயங்கள் அனைத்திலுமே வளையல் காப்பு அணிவிக்கும் உற்சவம் நடத்தப்படும். அன்றைய தினம் அம்மனுக்கு வளையல்களை வாங்கித் தந்து வழிபட்டு அவளது பிரசாதமாக சில வளையல்களைப் பெற்று அணிந்து கொண்டால், மனம்போல மாங்கல்யம் அமையவும், மங்களங்கள் நிலைக்கவும் செய்யும். அதோடு, அம்பிகை தாய்மைக்கோலம் கொண்ட நாள் என்பதால் குழந்தை பாக்கியமும் நிச்சயம் கிட்டும்.

ஒவ்வொரு பெண்ணின் வடிவிலும் அம்பிகையின் அம்சம் நிறைந்துள்ளது. எனவே ஆடிப்பூரம் தினத்தன்று அம்பிகையின் அருள் முழுமையாக நிறைந்திருக்கும் என்பதால் எந்த பேதமும் இன்றி இயன்ற அளவு மற்ற பெண்களுக்கு வளையல்கள், குங்குமம், மஞ்சள், ரவிக்கைத் துணி, புடவை என்று அவரவரால் இயன்ற மங்களப் பொருட்களை வாங்கித் தர வேண்டும். அப்படி செய்தால் இல்லறம் சிறக்கச் செய்யும். இன்பங்கள் நிறையச் செய்யும் என்பது ஐதீகம்.

தாலிபாக்கியம் சிறக்க, தாயாகும் பேறுபெற, வளமும் நலமும் பெருக நீங்கள் வேறு எதுவும், செய்ய வேண்டாம். ஆடிப்பூர நாளில் அம்மனுக்குக் கொஞ்சம் வளையல் வாங்கிக் கொடுங்கள். பதிலுக்கு உங்கள் வாழ்க்கை வளமையாகும் வரத்தை நிச்சயம் தருவாள் அம்பிகை.

ஆடி மாதத்தில் பூரம் நட்சத்திரம் உச்சமாக இருக்கும். இந்நாளில் ஏழை சுமங்கலிப் பெண்களுக்கு புடவை, மஞ்சள், குங்குமம், வெற்றிலை பாக்கு, பணம் வைத்து கொடுப்பது நல்லது. இந்த நாளில் மஞ்சள் தாலி கட்டிக்கொள்ள தீர்க்க சுமங்கலியாய் இருப்பர். ஆடிப்பூரம் அன்று சக்தி தலங்களில் அம்மன் ஆலயங்களில் வழிபட கேட்கும் வரம் கிடைக்கும். ஆரோக்கியமும், செல்வ செழிப்பும் உண்டாகும்.

# மழலைகளுக்கு பிறந்த நாள் வாழ்த்துக்கள்



**ஜூலை 17**
**K.R.அஸ்வின்**
பெற்றோர் :
**A.கதிரேசன் - V.ரேவதி**




**செப்டம்பர் 01**
**G.S.ஸ்ரீமுத்துகுமரன்**
பெற்றோர் :
**M.G.சரவணன்**
**S. உமா மகேஸ்வரி**
திருப்பூர்.



# செங்குந்தர்




## எண்ணங்கள் • ஆலோசனைகள் • சொந்தக்கருத்து

சென்ற மாத செங்குந்த மித்திரன் மின் இதழைப் படித்தேன். தலைவர் மடலில் "வாழ்க்கையில் முன்னேறியவர்கள் யாரும் அடுத்தவர் மீது புகார் சொல்லிக் கொண்டிருப்பதில்லை" என்ற வரிகள் நிதர்சனமான உண்மை. இரண்டாயிரம் ஆண்டு பழமையான திருக்கோகர்ண ஆலய வரலாறு படித்து மகிழ்ந்தேன். மூலவரும், அன்னையும், இதர சிற்பங்களும் கலை நுணுக்கத்துடன் குடைவரை கோயிலாகக் கட்டப்பட்டுள்ளது வியக்கத்தக்கதாகும்.

– பா. இராஜேந்திரன், *திட்டக்குடி.*

• ✶ •

அட்டையில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் இரண்டாம் தலைவர் திரு.ஆ.வே.முத்தையா செங்குந்தர் பி.ஏ.பி.எல். அவர்கள் படம் அருமை. அவரின் வாழ்க்கை வரலாறு நமக்கு பாடம் நல்ல படிப்பினை. நாட்டின் நிர்வாகம், சமூக முன்னேற்றம் இரண்டும் இரு கண்கள் என வாழ்ந்த பெரியவர் புகழ் போற்றுவோம்!

– சித.வீரமணி, *செம்பாக்கம்.*

பேராசிரியர் கா.முருகேசன் திருக்குறள் கதை சிறப்பு. மௌன சாமிகள் பௌர்ணமி தினத்தில் தியானம் செய்ய, கூட்டம் அதிகம் தியானம் மனநிலை ஒன்றுபடுத்தல், அலைபாயும் மனதை கட்டுப்படுத்துதல் போன்ற பயிற்சி களைக் கொடுத்தார். ஆழ்நிலை தியானம் இந்த பயிற்சியில் மையக் கருத்து. சிற்றின்பத்தை காட்டிலும் பேரின்பம்தான் சிறந்தது. அதுவே வீடுபேறு கொடுக்கும் என்ற உண்மையை எடுத்துக் கூறினார். இந்த கதை அருமை.

– பொன்.ராஜசேகரன், *ஆத்தூர்.*

• ✶ •

புதுக்கோட்டை நகரின் அழகு பிரகதாம்பாள் அம்மன் கோயில் சிறப்பு அதன் தல வரலாறு கட்டுரை மிகவும் பெருமை வாய்ந்தது. சிறந்த கோயில் வேலைப்பாடுகள் நிறைந்த சிற்பங்கள் அழகு, அன்னை பிரகதாம்பாள் அழகு காணக் கோடி வேண்டும். அன்னையின் அருள் பெறுவோம் நல்லது அனைத்தும் நடக்கும். ஆன்மீக பணி தொடர்க.

– தி.க.வேல்முருகன், *திட்டக்குடி.*

கூலையில் உதிர்ந்த சோலை மலர்கள் கவிதை அருமை! படித்தேன்! ரசித்தேன்! மிகவும் சிறப்பாக உள்ளது. சந்தம், சொற்சுவை, பொருட்சுவை இனிமை.

— **கே. கந்தசுப்ரமணியன்,** *கூடுவாஞ்சேரி.*

சென்ற இதழ் தலைவர் மடலில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் தொடங்கப்பட்டதற்கு காரணமாக இருந்தவரும், மித்திரன் இதழ் தோன்ற காரணமாக இருந்தவருமான காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் நினைவு நாள், நெசவாளர் கூட்டுறவு சங்கம் அமையக் காரணமாக இருந்தவரும், தெ.செ.ம.சங்கத்தின் தலைவருமான திருப்பத்தூர் திரு கா.அ.சண்முகம் செங்குந்தர் அவர்களின் நினைவு நாள் ஆகியவற்றை குறிப்பிட்டு நினைவைப் போற்றியது சிறப்பு. நாம் முழுத் திறமையைப் பயன்படுத்தி வாழ்க்கையில் உயரத்திற்கு செல்ல வேண்டும் என்ற அவருடைய ஆசையை நிறைவேற்ற உழைப்போம்.

— **P.மதனகோபால்,** *பட்டுக்கோட்டை.*

வாரியார் அருளமுதம் அத்தனையும் உண்மை. அருமை, பெருமைகளை எடுத்து கூறும் கருத்து பெட்டகம். அந்த இனிய வாக்கியங்கள் எண்ணி எண்ணி மனம் மகிழ்ந்து நன்மை பயக்கும் கருத்துக்கள் உள்ளன. படித்தால் மனம் தூய்மையாகும். படிக்கும் போதே பரவசம் தரும் வாரியார் சுவாமிகள் அருளிய ஆன்மீகம் சார்ந்த கருத்துருக்களைப் படிப்போம் பயன்பெருவோம்!

— **ச.த.மனோகரன்,** *திட்டக்குடி.*

தென்னிந்திய செங்குந்தர் மகாஜன சங்கத்தின் மேனாள் தலைவர் கைத்தறி காவலர் நெசவாளர் நேசன் உத்தியோக ரத்னா சிவத்திரு ஜெ.சுத்தானந்தன் ஐயா அவர்கள் 11வது நினைவு தினப் புகைப்படங்கள் செய்திகள் தொகுப்பு மிகவும் பெருமை சேர்க்கும் வகையில் இருந்தது. ஐயா அவர்கள் நினைவு போற்றுவோம்.

— **கே.ஆளவந்தான்,** *சின்னசேலம்.*

சமைக்க ருசிக்க பகுதியில் வெளிவந்த கடலைப்பருப்பு இனிப்பு இட்லி ருசியாகவும் சுவையாகவும் இருந்தது. அவல் போண்டாவும் செய்து பார்த்தோம். குழந்தைகளுக்கு மிகவும் பிடித்திருந்தது. தொடர்ந்து இதுபோன்ற குழந்தைகள் விரும்பும் உணவுகளை சமைப்பது பற்றிய குறிப்புகளை வெளியிடுங்கள்.

— **ஈ.லதாமணி,** *சின்னாண்டிபாளையம்.*

அம்பிகை சரணடைந்தால் அதிக வரம் பெறலாம்.. பகுதியில் அபிராமி அந்தாதி பாடலும் கருத்தும் சிந்தையில் ஆன்மீகம் தழைக்க உதவும் உரம். நல்லது கூறும் பாடல்கள்; நன்மை பயக்கும் கருத்துக்கள். அபிராமி அந்தாதியில் 18 பாடல் மரண பயம் அகலும் 19 பாடல் மன நிம்மதி கிடைக்கும் மகிழ்ச்சி கிடைக்கும் என்பது நம்பிக்கை ஊட்டும் வகையில் அமைந்துள்ளது. ஆழ்ந்த புலமையும் அறிவும் அனுபவமும் அபிராமி பட்டர் பெற்ற தேன் கலந்து சுவைமிக்க வகையில் அமைந்துள்ளது சிறப்பு.

— **ஆர்.பாலமுருகன்,** *ஆத்தூர், சேலம்.*







# செய்யாறு குறிஞ்சி குகன் மேட்ரிமோனி

**(செய்யாறு வட்டச் செங்குந்தர் நலவாழ்வு சங்கத்தால் இயக்கப்படுகிறது)**

**(செங்குந்தர் திருமண தகவல் மையம்)**

## குறிஞ்சி குகன் நிலையம்

15/2, கோபால் தெரு, கிருபானந்தவாரியார் நகர்,
ரேணு மஹால் அருகில், செய்யாறு – 604 407. தி.மலை மாவட்டம்.
மேலும் தொடர்புக்கு: **04182 - 222784, 89739 32751, 94871 07254**

**www.cheyyarkurinjikuganmatrimony.com**

**E-mail : senguntharsmanamaalai@gmail.com**

அன்புள்ள சொந்தங்களே,

தங்கள் வீட்டில் திருமணத்திற்குக் காத்திருக்கும் வரனின் முழு ஜாதக விபரத்துடன் (Bio Data) + புகைப்படத்தை (Post Card Size) இணைத்து நேரில் (அல்லது) ஆன்லைனில் (Online) பதிவு செய்யுங்கள். பொருத்தமான வரன் உள்ளது. வரனின் திருமணம் முடியும் வரை பதிவு நீடிக்கும்.

திருமணம் நடந்து முடிந்த உடன் நீக்க தகவல் தெரிவிக்கவும்.

**சேவைக் கட்டணம்: ரூ. 1000/- மட்டுமே!**

**CHEYYAR TALUK SENGUNTHAR WELFARE SOCIETY payable - CHEYYAR**
**என்ற பெயருக்கு DD (or) Postal Money Order (or) Indian Overseas Bank (IOB),**
**Cheyyar Branch, A/c No. 189101000007819 IFSC CODE: IOBA0001891**
**NEFT/IMPS Banking ஏதாவது ஒன்றிற்கு சேவை கட்டணம் அனுப்பலாம்.**

**வரன் பார்க்க வாங்க:**
**பகல் 10:00 - 1:00 மாலை 4:00 - 7:00 மணி வரை**
**விடுமுறை: பிரதி சனிக்கிழமை மற்றும் நமது பண்டிகை நாட்கள்.**

# மணமகள் தேவை



பெயர் : **மு.ரகுநாதன்**

பிறந்த தேதி: 24.03.1989 வெள்ளிக்கிழமை மதியம் 2.30 P.M.

படிப்பு : B.E.,

பணி : TCS (Software Engineer)

வருமானம் : 12,00,000/- வருடம்

நிறம், உயரம் : மாநிறம், 165 செ.மீ.,

| | | | |
|---|---|---|---|
| சூ சு | | செ கு | |
| பு ரா | இராசி | | ல |
| | | | கே |
| சனி | | சந் | |

| | | | |
|---|---|---|---|
| கு | | செ | பு கே |
| | நவாம்சம் | | |
| | | | |
| ரா | ல | சந் | சூ சு சனி |

கோத்திரம் : சிவ கோத்திரம்

நட்சத்திரம் : சித்திரை 3ஆம் பாதம் ராசி, லக்னம் : துலாம், கடகம்

தந்தை பெயர் : ரா.முனுசாமி முதலியார் (ஜவுளி வியாபாரம்)

தாயார் பெயர் : மு.லலிதா அம்மாள்

சொத்து விவரம் : விவசாய நிலம், இரண்டடுக்கு மாடி வீடு, காலிமனைகள் உள்ளூர் மற்றும் சென்னையில் உள்ளது. போதுமான வசதி உள்ளது.

செல் : **91507 14276. (Whatsapp - 91507 14276)**

மின்னஞ்சல் : ramanujam.pass1@gmail.com

சொந்த ஊர் : வேலூர் மாவட்டம்



பெயர் : **சே.ஸ்ரீசியாம் பிரகாஷ்**

பிறந்த தேதி : 30.06.1994, வயது : 27, பவ வருடம் ஆனி மாதம் 16ஆம் தேதி வியாழக்கிழமை 12.40 P.M., சேலம்

நட்சத்திரம் : உத்திரட்டாதி 2ம் பாதம்

ராசி, லக்னம் : மீனம், கன்னி

இரத்த வகை : AB+ve

| | | | |
|---|---|---|---|
| சந் | கே | செ | பு(வ) சூ |
| சனி(வ) | இராசி | | சு |
| | | | மா |
| | | கு(வ) ரா | ல |

| | | | |
|---|---|---|---|
| சனி(வ) | | | ரா |
| சூ சு செ | நவாம்சம் | | ல |
| கு(வ) | | | |
| கே பு(வ) | | மா | சந் |

சனி திசை இருப்பு 11 வருடம் 1 மாதம் 2 நாள்

படிப்பு : B.E., PGDM - Birla Inst

பணி : Executive in Mahindra & Mahindra

தந்தை பெயர் : அ.சேகர்

தாயார் பெயர் : S.சாந்தி

முகவரி : S3, பிரேமசாயிசா அபார்ட்மெண்ட், F16, இந்திரா காந்தி தெரு, ஃபேர்லேண்ட்ஸ், சேலம் - 636 016

செல் : **94422 61627**

மின்னஞ்சல் : sekarshiyam@gmail.com

Well Settled Family

# மணமகள் தேவை



| | |
|---|---|
| Name | : **J. PRAWIN KUMAR** |
| Education | : M.B.A., (UK), PGDB (Newzealand) |
| Date of Birth | : 15.01.1991, Salem, 2.45 P.M., Tuesday Krishna Paksham, Amavasai Thithi |
| Star | : Pooradam 4th Padham |
| Rasi | : Dhanusu |
| Lagnam | : Rishabam |
| Height | : 5 feet 6 inches |
| Complexion | : Fair |
| Income | : 4,00,000/-PM |
| Fathers Name | : **S.JAYAPAL** |
| Mothers Name | : **J.SANTHI** |
| Sisters | : 2 Elders (Married) |
| Brothers | : No |
| Address | : Rtn. S. Jayapal,<br>JAYKAY TRADERS ENNTERPRISES<br>Dealers in: Bolts, Nuts, Nails, Washer & Tools<br>37/6, Chittu Kovil Street, SALEM - 636 001. |
| Mobile / Whatsapp | : **94433 72221, 97860 12227** |
| Expectation | : Well educated girl from a good family background |

| | | | |
|---|---|---|---|
| | மா | ல / செ | |
| | **இராசி** | | கு கே |
| சூ சு சனி ரா | | | |
| பு சந் | | | |

| | | | |
|---|---|---|---|
| | | ல | பு சு |
| செ சனி ரா | **நவாம்சம்** | | |
| சூ | | | கே |
| | சந் கு மா | | |

**சுக்ர திசை இருப்பு 3 வருடம் 6 மாதம் 29 நாள்**

# மணமகள் தேவை



பெயர் : **அ.தேவானந்த்**

பிறந்த தேதி : 12.11.1985, செவ்வாய்கிழமை
மதியம் 12.56 P.M. ஐப்பசி மாதம் 27ஆம் தேதி

நட்சத்திரம் : விசாகம் 1ம் பாதம்

ராசி, லக்னம் : துலாம், கும்பம்

நிறம், உயரம் : சிகப்பு, 177 செ.மீ.,

படிப்பு : B.E., (E.C.E.)., M.S., (Finland),

பணி : J2W (Mercedes Benz), Bangalore

வருமானம் : 90,000/- மாதம்

தந்தை பெயர் : D.அருள்பிரகாசம்,
மத்திய அரசு ஊழியர் (NSIC) பணி ஓய்வு

தாயார் பெயர் : A.இந்திரா (லேட்)

உடன் பிறந்தோர் : அக்கா 1, தம்பி 1 இருவரும் திருமணம் ஆனவர்கள்

பூர்வீகம் : கடலூர் மாவட்டம்

முகவரி : பிளாட் எண் 16, யமுனா நகர், கூடுவாஞ்சேரி - 603 202,
செங்கல்பட்டு மாவட்டம்

செல் : **96001 15756** வாட்ஸ் அப்: **99520 97133**

உணவு வழக்கம் : அசைவம்

| | | | |
|---|---|---|---|
| | ரா | | |
| ல | இராசி | | |
| கு | | | |
| | சனி பு(வ) | சு சந் சூ கே | செ |

| | | | |
|---|---|---|---|
| | சந் | சூ செ | கு |
| கே | நவாம்சம் | | சனி |
| | | | பு ரா |
| சு | | ல | |

குரு திசை இருப்பு
13 வருடம் 11 மாதம் 25 நாள்

8/20610/30-06-2021



பெயர் : **S.நிர்மல்** (மறுமணம்)

பிறந்த தேதி: 08.12.1983, காலை 8.00 மணி,
வியாழக்கிழமை சுப ஜனனம், வயது 37

நட்சத்திரம் : உத்திராடம் 2ம் பாதம்

ராசி, லக்னம் : மகரம், தனுசு

நிறம், உயரம், எடை : சிவப்பு, 180 செ.மீ., 69 கிலோ

படிப்பு : B.Tech., (CSE),

பணி : Team Lead, Infosys, Chennai

வருமானம் : 80,000/-மாதம்

தந்தை பெயர் : R.சிவப்பிரகாசம், M.E., DGM, NLC, (Retd),

தாயார் பெயர் : S.குணசாந்தி, B.Sc.,

உடன் பிறந்தோர் : இல்லை

சொத்து விபரம் : Own Flat in Chennai

முகவரி : Flat B6F - 103, Navins Springfield,
Thiruvalluvar Street, Medavakkam, Chennai - 600 100

செல் : **94432 26806, 94877 57806**

மின்னஞ்சல் : pdysiva@gmail.com

எதிர்பார்ப்பு : படித்த, வேலையில் உள்ள பெண் தேவை.

| | | | |
|---|---|---|---|
| | | ரா | |
| | இராசி | | |
| சந் | | | |
| ல பு | சூ கு கே | சு சனி | செ |

| | | | |
|---|---|---|---|
| கு | | செ | பு |
| சனி | நவாம்சம் | | ரா |
| சூ சந் கே | | | ல |
| சு | | | |

சூரிய திசை இருப்பு
3 வருடம் 1 மாதம் 20 நாள்

# மணமகள் தேவை



Name : **VICKNESHWAR.R**
Education : B.Tech., (I.T.)
Date of Birth : 28.07.1989, 6.38 P.M.
Ambasamudram, Tirunelveli Dist.
Star : Rohini 3rd Padham
Rasi, Lagnam : Risabam, Magaram
Job : Senior Architect At MNC, Chennai
Income : 1,40,000/-PM
Fathers Name : Ramanathan.P.
(Asst.Manager in Pvt.Co. at Chennai)
Mothers Name : Muthulakshmi.R. (House Wife)
Address : Thiruvengada Nagar, Ambattur OT,
Chennai - 600 053
Cell : **98408 89679, 90946 96968**
Siblings : Nil
Expectation : Fair, Educated and Working Girl

| | | | |
|---|---|---|---|
| | | சந் | கு |
| ரா | இராசி | | சூ பு |
| ல | | | செ சு கே மா |
| சனி | | | |

| | | | |
|---|---|---|---|
| பு | ல / செ கே | | சந் சனி |
| | நவாம்சம் | | சு |
| | | | |
| | கு | சூ ரா | மா |

சந்திர திசை இருப்பு
2 வருடம் 9 மாதம் 28 நாள்



பெயர் : **R.வினோதனன்**
பிறந்த தேதி: 05.07.1992, ஞாயிறு
காலை 11.27 மணி, ஆங்கிரஸ வருடம்,
ஆனி மாதம் 21ம் நாள், சென்னை வயது : 29
நட்சத்திரம் : பூரம் 4ம் பாதம்
ராசி, லக்னம் : சிம்மம், கன்னி
நிறம், உயரம், எடை : சிகப்பு, 84 கிலோ, 185 செ.மீ.,
இரத்த வகை : O+ve
படிப்பு : B.E., (Aeronatical) பணி : தனியார்
தந்தை பெயர் : T.T.ரவி, தனியார் நிறுவனம் தந்தை பூர்வீகம்: திருமழிசை
தாயார் பெயர் : R.பிரியதர்ஷினி, தனியார் நிறுவனம்
பிறப்பு வரிசை: முதல் உடன் பிறந்தோர் : தம்பி 1 பணியில் உள்ளார்
முகவரி : B-9, Rams, O.No.16/ N.No. 18, Bagavandham Street,
T.Nagar, Chennai - 600 017
செல் : **98400 41605, 94441 85460**
மின்னஞ்சல் : ravittpriya@gmail.com
சொத்து விபரம்: Flat in T.Nagar
எதிர்பார்ப்பு : வயது 24 - 27, உயரம் 5'5"க்கு மேல், Any Degree,
உணவு பழக்கம் அசைவமாக இருக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| | செ | | சூ சு கே |
| | இராசி | | பு |
| சனி(வ) | | | சந் கு |
| ரா | | | ல |

| | | | |
|---|---|---|---|
| சூ | | ரா சு | |
| ல | நவாம்சம் | | |
| | | | சனி(வ) |
| | சந் பு கே | செ | கு |

சுக்ர திசை இருப்பு
2 வருடம் 3 மாதம் 11 நாள்

# மணமகள் தேவை

ஸ்ரீ பச்சைவாழியம்மன் துணை.



பெயர் : **K. செந்தில்குமார்**

பிறந்த தேதி : 22.07.1982, வியாழக்கிழமை காலை 11.00 மணி

நட்சத்திரம் : ஆயில்யம் பாதம் - 3

ராசி, லக்னம் : கடகம் / கன்னி

படிப்பு : B.A.,

பணி : VALLALAR CAPS

வருமானம் : 80,000/-மாதம்

நிறம் : மாநிறம் இனம்: செங்குந்தர் முதலியார்

தந்தை பெயர் : திரு. V.கந்தசாமி

தாயார் பெயர் : திருமதி. K.லட்சுமி

உடன் பிறந்தோர் : சகோதரிகள் 3 - நபர், திருமணம் ஆனவர்கள், தம்பி 1 திருமணமாகவில்லை

முகவரி : 13/52, 6வது குறுக்குத் தெரு, (மாடி வீடு) S.K.S.நகர், குறிஞ்சிப்பாடி (Post), கடலூர் மாவட்டம்

செல் : **94886 86694, 99449 60684**

| | | | |
|---|---|---|---|
| | | | ரா சு |
| | இராசி | | சந் சூ பு |
| | | | |
| கே | | செ கு | ல / சனி |

| | | | |
|---|---|---|---|
| ரா | | | |
| சந் | நவாம்சம் | | ல / சனி |
| கு | | | சூ |
| சு | | செ பு | கே |

ஸ்ரீ பச்சைவாழியம்மன் துணை.



பெயர் : **K.ஆறுமுகம்**

பிறந்த தேதி : 07.01.1986, அதிகாலை 4.10 மணி

நட்சத்திரம் : அனுஷம்

ராசி, லக்னம் : விருச்சிகம், விருச்சிகம்

படிப்பு : Diploma in Yoga (YHE)

பணி : BHEL - Ranipet (Central Govt of India)

வருமானம் : 50,000/-மாதம்

நிறம் : மாநிறம்

தந்தை பெயர் : திரு.V.கந்தசாமி

தாயார் பெயர் : திருமதி.K.லட்சுமி

உடன் பிறந்தோர் : அக்கா 3, திருமணம் ஆனவர்கள், அண்ணன் 1 திருமணமாகவில்லை

முகவரி : 13/52, 6வது தெரு, S.K.S.நகர், குறிஞ்சிப்பாடி (Post) கடலூர் மாவட்டம்

செல் : **72008 26928, 94886 86694**

| | | | |
|---|---|---|---|
| | ரா | | |
| | இராசி | | |
| கு | | | |
| சூ சு பு | ல / சந் சனி | செ கே | |

| | | | |
|---|---|---|---|
| செ | | | |
| | நவாம்சம் | | ரா |
| கே | | | கு பு சந் |
| ல / | | சூ | சு சனி |

சனி மகா திசை இருப்பு 16 வருடம் 2 மாதம் 7 நாள்

20585/23.06.2021

# மணமகள் தேவை

பெயர் : **M.முரளி**
படிப்பு : B.E., (Computer Science),
பிறந்த தேதி : 13.05.1989 சனிக்கிழமை இரவு 10.10 PM
சித்திரை 30 இடம்: காட்டுமன்னார்கோயில்
நட்சத்திரம் : மகம் 3ஆம் பாதம் ராசி, லக்னம் : சிம்மம், தனுசு
நிறம், உயரம், எடை : மாநிறம், 169 செ.மீ., 60 கிலோ
பணி : Manager, DELOITTE, T.Nagar, Chennai
வருமானம் : 18,50,000/-PA
தந்தை பெயர் : மா.மீனாட்சி சுந்தரம், B.E.,
உதவி மின் பொறியாளர்(ஓய்வு) தமிழ்நாடு மின்சார வாரியம்
தாயார் பெயர் : கோ.வாசுகி, M.A., B.Ed., தலைமை ஆசிரியை,
கலைமகள் உதவி பெறும் நடுநிலைப்பள்ளி, உடையார்குடி
உடன் பிறந்தோர் : இளைய சகோதரி திருமணமானவர்
M.ஜீவிதா மோகன்ராஜ், B.E., (EEE), Software Engineer, Accenture, Chennai.
R.மோகன்ராஜ், B.E., (EEE), MBA., Team Leader, Accenture, Chennai
முகவரி : 21, புது தெற்குத் தெரு, உடையார்குடி,
காட்டுமன்னார்கோயில் - 608 301
செல் : **99657 68221, 87601 86540**
எதிர்பார்ப்பு : சம படிப்பு அதற்கு மேலும், நல்ல குடும்பப் பின்னணி உள்ள மணமகள் தேவை. பணியில் உள்ள பெண்ணாகவும் இருக்கலாம்.
குறிப்பு : ஜாதகம் பொருத்தமிருப்பின் தொடர்பு கொள்ளவும்.

| | | | |
|---|---|---|---|
| | சூ பு | கு சு | செ |
| ரா | இராசி | | |
| | | | சந் கே |
| ல / சனி | | | |

| | | | |
|---|---|---|---|
| சு | | கே | சந் கு |
| செ | நவாம்சம் | | சனி |
| | | | |
| சூ பு | ரா | ல | |

கேது திசை இருப்பு
1 வருடம் 10 மாதம் 5 நாள்



பெயர் : **S.விக்னேஷ்** படிப்பு : B.E.,
பிறந்த தேதி : 04.10.1992 ஆங்கிரஸ ஆண்டு புரட்டாசி மாதம் 18ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 05.18க்கு சுபஜெனனம். நெய்வேலி, கடலூர் மாவட்டம்.
ராசி / லக்னம் : தனுசு / மீனம் நட்சத்திரம்: பூராடம்
நிறம்/ உயரம்/இனம் : மாநிறம்/178 செமீ/ செங்குந்தர்
பணி : Senior support Engineer.
Consim Info Pvt Ltd, Chennai.
வருமானம் : Rs.52,000/- per month.
தந்தை : V. செல்வன் அரசு ஊழியர் (ஓய்வு). TNSTC.,
தாய் : S. சாந்தி (இல்லத்தரசி
உடன்பிறந்தவர்கள் : சகோதரி - 1 - திருமணம் ஆகிவிட்டது.
S.வினுபிரியா B.SC.,MCA., - S.சரவணன் MBA.,
(1 பெண்குழந்தை) - பணி பெங்களூர்.
முகவரி : 42, அண்ணா வீதி, திட்டக்குடி அஞ்சல் - 606 106,
திட்டக்குடி வட்டம், கடலூர் மாவட்டம்.
செல் : **7339443928, 9361081263.**
வசதிகள் : சொந்த மாடி வீடு, திட்டக்குடி மற்றும் தொழுதூரில் பிளாட் உள்ளது.
எதிர்பார்ப்பு : B.E., / பட்ட மேற்படிப்பு முடித்த நல்ல குடும்ப பின்னணி நல்ல நிறம், நல்ல உயரமான பெண். சென்னையில் பணியில் இருத்தல் நல்லது.
தோஷம் : ராகு கேது தோஷம் உள்ளது.

| | | | |
|---|---|---|---|
| ல | | | கே செ |
| | இராசி | | |
| சனி | | | |
| ரா சந் | | பு சு | கு சூ |

| | | | |
|---|---|---|---|
| செ | சனி ரா | | சூ |
| கு சு | நவாம்சம் | | ல |
| | | | |
| பு | சந் | கே | |

சுக்கிரன் திசை இருப்பு
01 வருடம் 02 மாதம் 27 நாள்

27

# மணமகள் தேவை



பெயர் : **த.செந்தில்குமார்**

பிறந்த தேதி : 26-06-1990 செவ்வாய்க்கிழமை இரவு 7:00 மணி பிரமோதூத வருடம் ஆனி மாதம் 12ஆம் தேதி உதயாதி நாழிகை 32 வினாடி 45

நட்சத்திரம் : ஆயில்யம் 4ஆம் பாதம்

ராசி / லக்னம் : கடக ராசி / தனுசு லக்னம்

நிறம் / உயரம் : சிவப்பு / 157 செ.மீ.

கல்வித் தகுதி : B.Tech., (CSE)

பணி : Consultant, L&T Infotech Ltd., பெங்களூர்

மாத ஊதியம் : ரூ. 1,10,000/-

தந்தை பெயர் : செ. தட்சணாமூர்த்தி M.A., M.Phil., ஆசிரியர் - பணி நிறைவு (புதுவை அரசு)

தாய் : த. ஜெயலட்சுமி, இல்லத்தரசி

சகோதரி (மூத்தவர்) : த. அருட்செல்வி B.Tech., Assistant Consultant, TCS, Chennai. பா. துரைமுருகன் (மருமகன்) B.E., Senior Application Engineer, MEZ Engineering Pte. Ltd., Singapore.

முகவரி : 47-C, பாவேந்தர் வீதி, சங்கரதாஸ் சுவாமிகள் நகர், இலாசுப்பேட்டை (அஞ்சல்), புதுச்சேரி - 605 008.

தொலைபேசி : **+91 96776 51224, 0413 - 2234998**

| | | | |
|---|---|---|---|
| செ | | சு | சூ பு கு |
| | இராசி | | சந் கே |
| ரா | | | |
| ல / சனி | | | |

| | | | |
|---|---|---|---|
| சந் சு | | கு ரா | |
| செ பு | நவாம்சம் | | |
| சூ | | | |
| | கே | சனி | ல |

புதன் திசை இருப்பு
01 வருடம் 07 மாதம் 13 நாள்



பெயர் : **R. முத்துசங்கர்**

பிறந்த தேதி : 24-09-1990, திங்கட்கிழமை, 05:40PM சங்கரன்கோவில்

நட்சத்திரம் : அனுஷம் 2ம் பாதம்

ராசி/லக்னம் : விருச்சிகம் ராசி / கும்பம் லக்னம்

நிறம் /உயரம் : மாநிறம் / 178 CM

படிப்பு : B.E., (Electronics & Communication Engg)

பணி : Senior Tech Lead, Odessa Technologies, Bengaluru

வருமானம் : 14 Lakhs Per Annum

தந்தை பெயர் : T. இராதாகிருஷ்ணன், M.A., M.Ed., முதுகலை பட்டதாரி ஆசிரியர் (அரசு பணி).

தாயார் பெயர் : N.மீனாட்சி ,D.Pharm., மருந்தாளுநர் (அரசு பணி).

உடன்பிறந்தோர் : R.சரண்யா, B.E., (தங்கை) திருமணமானவர், Software Engineer, married to R.U.ஜீவா, M.Tech., Lead Engineer - CAE, சென்னை

முகவரி : 65, 2வது மெயின் 6வது குறுக்குத் தெரு, காமாட்சி நகர், திருநெல்வேலி - 627011.

கைபேசி : **94423 14249, 94425 20749**

எதிர்பார்ப்பு : B.E.,/B.Tech., / ME/ M.Tech.,/ M.B.A.,/ M.C.A., படித்து பணியில் உள்ள குடும்பப்பாங்கான பெண் தேவை.

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| ல | இராசி | | கு கே |
| ரா | | | பு சு |
| சனி | சந் | | சூ |

| | | | |
|---|---|---|---|
| சூ ரா | ல / செ | | |
| | நவாம்சம் | | |
| | | | |
| | பு கு சு | | சந் கே சனி |

சனி திசை இருப்பு
10 வருடம் 7 மாதம் 28 நாள்

# மணமகள் தேவை



பெயர் : **K.சுரேஷ்**
பிறந்த தேதி : 08.08.1977, வேலூர், 5.45 A.M.
பிங்கள வருடம் ஆடி 23ந் தேதி, திங்கள்கிழமை.
நட்சத்திரம் : கிருத்திகை 3ம் பாதம்
ராசி, லக்னம்: ரிஷபம், கடகம்
படிப்பு: Leather Technology, B.Tech., MBA.,
நிறம், உயரம்: சிகப்பு, 170 செ.மீ.,
பணி : Senior Executive,
Viswaat Chemicals, Ranipet

| | | | |
|---|---|---|---|
| கே | | செ சந் | கு சு |
| | இராசி | | ல / சூ சனி |
| | | | பு |
| | | | ரா |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சூ கே சந் | நவாம்சம் | | செ |
| சு சனி | | | ரா |
| ல / | கு | | பு |

சூரிய திசை இருப்பு விபரம்
2 வருடம் 5 மாதம் 21 நாள்

வருமானம் : 40,000/-மாதம்
தந்தை பெயர் : R.கோதண்டன், Office Manager,
Govt I.T.I., Vellore (Retd)
தாயார் பெயர் : K.லலிதா, இல்லத்தரசி
உடன் பிறந்தோர் : அண்ணன் 1 R.K.ஸ்ரீதர், B.Tech., (Chemical) (Married) Settled at Madras. தங்கை 1 K.கீதா, M.A., B.Ed., M.Phil., (Married) B.T.Asst. Settled at Madras.
பிறப்பு வரிசை : 2வது
எதிர்பார்ப்பு : B.Sc., B.Com., M.Com., M.Sc., B.E., B.Tech.,
முகவரி : எண்.26, சின்னத் தெரு, காங்கேயநல்லூர்,
வேலூர் - 632 006 செல் : **94862 73701**
சொத்து விபரம் : 10 ஏக்கர் நன்செய் நிலம், 3 பம்பு செட், 4 மாடி வீடு, Shopping Complex, சென்னையில் ஒரு மாடி வீடு உள்ளது.



பெயர் : **T.ராஜசேகரன்**
பிறந்த தேதி: 29.11.1987, பிரபவ வருடம்
கார்த்திகை மாதம் 12ம் தேதி சனிக்கிழமை 0.52 A.M.,
படிப்பு : M.C.A.,
பணி : Accenture Software Pvt Ltd, Chennai
வருமானம் : 35,000/-மாதம்
நட்சத்திரம் : பூரட்டாதி
ராசி, லக்னம் : கும்பம், சிம்மம்

| | | | |
|---|---|---|---|
| கு ரா | | | |
| சந் | இராசி | | |
| | | | ல / |
| சு | சூ பு சனி | செ | கே |

| | | | |
|---|---|---|---|
| கு | சந் | சு | |
| கே | நவாம்சம் | | |
| சனி | | | பு ரா |
| செ | | ல / சூ | |

கோத்திரம் : சிவகோத்திரம் நிறம், உயரம்: மாநிறம், 170 செ.மீ.,
தந்தை பெயர் : C.திருஞானசம்பந்தம்
தாயார் பெயர் : T.கோமதி
தந்தை, தாயார் பூர்வீகம் : வாரியங்காவல், அரியலூர் மாவட்டம் - 621 806
பிறப்பு வரிசை : 1
உடன் பிறந்தோர் : தங்கை 1 திருமணம் ஆனவர்
எதிர்பார்ப்பு : படித்த நற்குணமுள்ள நல்ல குடும்பப் பின்னணி உள்ள வரன் தேவை.
முகவரி : 401, பெரிய கடை தெரு, கதிராமங்கலம் - அஞ்சல், திருவிடைமருதூர், தாலுக்கா, தஞ்சாவூர் மாவட்டம் - 612106
செல் : **98949 40093, 99448 89910**

# காய்கறிகளின் மருத்துவ குணங்கள்



## வாழைப்பூ:

இதில் இரும்புச்சத்து, போலிக் அமிலம், வைட்டமின் ஏ, பி, சி சத்துக்கள் நிறைந்துள்ளன. இரத்தச்சோகை வராமல் தடுத்து உடலுக்கு தெம்பையும் புத்துணர்வையும் தரவல்லது.

## சேப்பங்கிழங்கு:

கால்சியம், பாஸ்பரஸ் அதிகம் நிறைந்துள்ளது. இவை எலும்புகளையும், பற்களையும் உறுதிப்படுத்தும்.

## பாகற்காய்:

வைட்டமின் ஏ, பி, சி, பாஸ்பரஸ், இரும்புச்சத்து, கால்சியம் சத்துக்கள் நிறைந்துள்ளது. நன்கு பசியைத் தூண்டும். உடலில் சர்க்கரையின் அளவைக் கட்டுப்படுத்தும்.

## வெண்டைக்காய்:

போலிக் அமிலம், கால்சியம், பாஸ்பரஸ் நிறைந்துள்ளன. மூளை வளர்ச்சியைத் தூண்டும். நன்கு பசியை உண்டாக்கும். மலச்சிக்கலைப் போக்கும்.

## பீட்ரூட்:

கால்சியம், சோடியம், பொட்டாசியம் சத்துக்கள் நிறைந்துள்ளன. மலச்சிக்கலைப் போக்கும், இரத்த சோகையை சரிபடுத்தும்.

## வாழைத்தண்டு:

இதில் கால்சியம், பாஸ்பரஸ், இரும்புச்சத்து, வைட்டமின் பி, சி நிறைந்துள்ளது. இரத்தத்தை சுத்தப்படுத்தும். இரத்தத்தில் உள்ள தேவையற்ற அசுத்த நீரை பிரித்தெடுக்கும். சிறுநீரகத்தின் செயல்பாடுகளை சீராக்கி சிறுநீரக கல் அடைப்பை தடுக்கும்.

## வாழைக்காய்:

இரும்புச்சத்து, பாஸ்பரஸ், வைட்டமின் பி, சி, சத்துக்கள் அதிகம் உள்ளது. வாயுவைத் தூண்டும் குணமுள்ளதால் இதை சமைக்கும்போது அதிகளவில் பூண்டு சேர்த்துக்கொள்வது நல்லது. மலச்சிக்கல் தீர்க்கும்.

## கோவைக்காய்:

வைட்டமின் ஏ, கால்சியம், போலிக் அமிலம், பாஸ்பரஸ், இரும்புச்சத்துக்கள் நிறைந்தள்ளன. வயிற்றுப்புண், வாய்ப்புண், மூல நோயின் தாக்குதல் போன்றவற்றை நீக்கும்.



## சோள ரவை புட்டு

### தேவையானவை:

சோள ரவை - ஒரு கப், நாட்டுச் சர்க்கரை - அரை கப், தேங்காய்த் துருவல் - கால் கப், நெய் - ஒரு டீஸ்பூன், பூசணி விதை, முந்திரி, பாதாம் - துருவல் ஒரு ஸ்பூன், ஏலக்காய்த் தூள் - ஒரு டீஸ்பூன்.

**செய்முறை:** சோள ரவையைக் கடாயில் வறுத்துக் கொள்ளவும். இதில், வெது வெதுப்பான உப்பு நீர் தெளித்து, தேங்காய்த் துருவல் சேர்த்து, ஆவியில் வேகவைத்து எடுக்கவும். பிறகு, நாட்டுச் சர்க்கரை சேர்க்கவும். நெய்யில் பூசணி விதை, பாதாம், முந்திரி, ஏலக்காய்த் தூள் சேர்த்து வறுத்துக் கிளறி, சாப்பிடவும்.

## பூண்டு மிளகுக் குழம்பு

### தேவையானவை:

பூண்டு - 100 கிராம், மிளகு, தனியா - தலா ஒரு டீஸ்பூன், காய்ந்த மிளகாய் - 2, கடலைப்பருப்பு - 2 டீஸ்பூன், கடுகு, உளுத்தம்பருப்பு - தலா அரை டீஸ்பூன், கறிவேப்பிலை - ஒரு கைப்பிடி, உப்பு - தேவையான அளவு, புளி - பெரிய நெல்லிக்காய் அளவு, எண்ணெய் - 100 மில்லி.

**செய்முறை:** வாணலியில் எண்ணெய் விட்டு தனியா, மிளகு, காய்ந்த மிளகாய், கடலைப்பருப்பு, கறிவேப்பிலை சேர்த்து வறுத்து, அரைத்துக்கொள்ளவும். பூண்டினை தோல் உரித்து எண்ணெய் விட்டு வதக்கிக் கொள்ளவும். வாணலியில் புளிக்கரைசலை விட்டு, உப்பு சேர்த்துக் கொதிக்கவிடவும். இதில் வதக்கிய பூண்டு சேர்த்து, அரைத்து வைத்ததையும் சேர்க்கவும். பூண்டு வெந்ததும், கடுகு – உளுத்தம்பருப்பு தாளித்துக் கொட்டி இறக்கவும்.

# சமைக்க.. ருசிக்க..

# கண்ணீர் அஞ்சலி



தோற்றம்
15-11-1941

மறைவு
10-07-2021

காரைக்கால் மாவட்ட செங்குந்த மகாஜன கல்விச் சங்க உறுப்பினர்

## வள்ளல் T.சாமிநாதன் முதலியார்

அவர்கள் 10-07-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்.

பிரிவால் வாடும்,

மனைவி : **S.இந்திராதேவி**

மகன்கள் : **S.இந்திரநாதன்**

**S.வெங்கடேஷ்**

**S.பக்கிரிசாமி**

**S.கார்த்திகேசன்**

மற்றும் குடும்பத்தினர்கள், உறவினர்கள்

படுதார், கொல்லை.

**நாயகி ஜுவல்லரி**, காரைக்கால்.

# முதலாம் ஆண்டு நினைவு அஞ்சலி

பூவுலகத் தோற்றம் : 01 - 07 - 1976 ❖ பொன்னுலக ஏற்றம் : 19 - 08 - 2020



காஞ்சிபுரம் மாவட்டம் - குன்றத்தூர் வட்டம், மேல்படப்பை கிராமம் பெரிய தெரு, எண்.11/35ல் வசித்த
தெய்வத்திருவாளர்கள் **வீராசாமி செங்குந்தர் - காமாட்சி அம்மாள்** அவர்களின்
மூத்த குமாரரும் - எனது கணவருமாகிய

## தெய்வத்திரு. V.சசிகுமார் செங்குந்தர்

அவர்களின் நினைவில் வாழும்... மனைவி **S.மலர்விழி**

தம்பிகள் : **V.ஜானகிராமன்** - திருமதி.**J.நதியா ஜானகிராமன்** **V.சதீஷ்** - திருமதி. **S.கீதாசதீஷ்**

மகன்கள் : **S.கோபிநாத் S.அரவிந்தன்**

**உறவினர்கள் மற்றும் நண்பர்கள் - மேல்படப்பை - 601 301**

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

## தலைமைச் சங்க நிர்வாகிகள் (2020 – 2023)

### தலைவர்



**திரு. K.P.K.செல்வராஜ்,**
20, பெத்தி செட்டிபுரம் கிழக்கு
2வது வீதி, திருப்பூர் – 641601.
செல்: **98430 43590**

### பொதுச்செயலாளர்



**திரு. R.P.குமரகுருபரன்**
61, சந்தானம் தெரு,
V.G.P. புஷ்பா நகர், மேடவாக்கம்,
சென்னை – 600100.
செல்: **91766 90404**

### பொருளாளர்



**திரு. R.காந்தி**
10, பழைய அக்ரஹாரம் தெரு,
சின்ன சொக்கிகுளம்,
மதுரை – 625 002.
செல்: **99943 75599**

### துணைப் பொதுச்செயலாளர்



**திரு. K.சுந்தரமூர்த்தி**
கெஜலட்சுமி பிளாட்ஸ்,
2/11, K.K. நகர் மெயின் ரோடு,
கொளத்தூர், சென்னை– 600 099.
செல்: **98406 11567**

### துணைத் தலைவர்கள்



**திரு. C.N.தட்சணாமூர்த்தி**
114/44F, நரிமுருகப்ப முதலி தெரு,
பிச்சனூர், குடியாத்தம் – 632 602.
கைபேசி: **94439 64556**



**திரு. மெட்டல் M.மணி**
76, VCV லே அவுட், R.S.புரம்,
கோயம்புத்தூர் – 641 002.
செல்: **94437 16040**



**திரு. P.மாரிமுத்து**
அனுசுயா ஜுவல்லரி
52, மெயின் ரோடு
சங்கரன்கோயில் – 627 756
செல்: **98421 26568**



**திரு. A.பாலதண்டபாணி**
1/311–1, செங்குந்தர் நகர்,
செங்குந்தர் பொறியியல் கல்லூரி,
மண்டகப்பாளையம் – 637 205.
திருச்செங்கோடு.
கைபேசி: **98427 53349**



**திரு. C.கார்த்திகேயன்**
219/18, Kavyam
Hari Shankar Road,
Tharekkad, Palakkad - 678 001
Kerala State
செல்: **070341 40659**



**திரு. P.G.செல்வராஜ்**
5-4-144, S.V. Koil Street
Ekambarakuppam-517 592
Nagari Mandal,
Chittoor Dist (A.P)
செல்: **94402 70600**

### செயலாளர்கள்



**திரு. சீனி. கார்த்திகேயன்**
42/73, இராஜராஜன் தெரு,
திருவண்ணாமலை – 606 601.
கைபேசி: **97512 99999**



**திரு. து.ப.புனிதம்**
6, 6வது தெரு,
செங்குந்தபுரம் – 621 802.
அரியலூர் மாவட்டம்.
செல்: **83441 69855**



**திரு. க.பாலசுப்ரமணியம்**
12/33A, ரெகுநாதபுரம் கிழக்கு,
தேவக்கோட்டை – 630 302.
சிவகங்கை மாவட்டம்.
செல்: **97887 86878**



**திரு. M.உதயசங்கர்**
551/3, சங்கமம் வீதி,
காமராஜ் நகர்,
பவானி – 638 301.
செல்: **98426 92234**



**திரு. R.கந்தசாமி**
No. 231, 1st Main, 3rd Croos,
KSTRC Layout,
J P Nagar 2nd Phase,
Bangalore - 560 078.
செல்: **098450 29016**



**திரு. ப.இராஜாக்கண்ணு**
2, தமிழ் இல்லம், பாரதி வீதி,
சாந்தி நகர், இலாசுப்பேட்டை
புதுச்சேரி – 605 008.
செல்: **94422 33381**

Printed by T.Parvathi, Published by **K.P.K.Selvaraj** on behalf of **South Indian Sengunthar Mahajana Sangam**
Printed at: Arul Vinayaga Fine Arts, 5/158, Samipuram Colony, Sivakasi - 626 189.
Published from 58, Armenian Street, Chennai - 600 001. Editor: **K.P.K.Selvaraj**

